உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'


ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.

சிறப்பாசிரியர்,

பேராசிரியர்
திரு. அ. ச. ஞானசம்பந்தன், M. A., சென்னை-83

ஆசிரியர் குழு:-

திரு. கம்பன் அடிப்பொடி, காரைக்குடி
திரு. மு. அருணாசலம், M. A., திருச்சிற்றம்பலம்
திரு. கா. ம. வேங்கடராமையா, M. A., தஞ்சை
மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், மதுரை
மகாவித்துவான்
திரு. சி. அருணைவடிவேல் முதலியார், அண்ணாமலைநகர்
திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., மதுரை
புலவர் திரு. கீரன், லால்குடி
டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கையா, M. A. Ph.D., மதுரை
திரு. சு. சுந்தரமூர்த்தி, M. A., திருப்பனந்தாள்
திரு. பொ. முத்தரசு M. A., ஸ்ரீவைகுண்டம்
டாக்டர் ம. வே. பசுபதி, D. Litt., திருப்பனந்தாள்


அட்டையில்:

திருஞானசம்பந்தர்
திருவுருவம்

பூங்கொன்றைக் கண்ணியான்பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ குமர குருபர சுவாமிகள், தம் குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் 'சமயம் தீர்ந்த தனிப் பொருளைக்' காட்ட வேண்டுகிறார். அதனைக் காட்ட ஏற்றவர் இவரொருவரே என்று நாமுணருமாறு ஒன்பது விளிகளால் அவர்தம்மை விளிக்கிறார். முதல் மூன்று விளிகளிலும், சமயம் தீர்ந்த தனிப் பொருளே நீ என்பதாகவும் எனவே உன்னையே எனக்குக் காட்டு என்னும் முறையிலும், அது காட்டவும், காணவும் தவம், ஞானம் துணை செய்ய வேண்டும் எனவும் உணர்த்தினார்.

அடுத்த மூன்று விளிகளால் தம் குருநாதரைக் 'கவிஞரே! காவியப்புலவரே! கல்விப் பிரசங்கியே! என்று விளிக்கிறார்.

கவிஞன் முயற்சியால் வருவதில்லை கவிதை; தெய்வ அருட்கொடை. கவிஞன் கடவுளால் படைக்கப்படுகிறான்.

'கடுகைத் துளைத்து எழுகடலைப் புகுத்தும்' அதிசயம் போலச் சில சொற்களில் தான்எண்ணியதெல்லாம் அமைப்பது கவிஞனுக்கே சாத்தியமாகும்! சமயம் தீர்ந்த தனிப்பரம் பொருளைச் சின்மொழியால் உடன் சொல்லும் திறம் பெற்றவர் நீங்களே என்று கூறுமாறு,

சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ!

என்றார். இந்தத் தொடரிலே தமிழ்க் கவிஞர்கட்கு இலக்கணமே இருக்கிறது என்று சொல்லலாம். கவிஞன் உபயோகிக்கும் சொற்கள் விரசமற்றதாகச் சுவை உள்ள தாக இருக்க வேண்டும். சுவை என்பது மெய்ப்பாடு; மெய்ப்பாடென்பது பொருட்பாடு. கவிஞன் சொற் களினால் உணர்த்தும் மெய்ப்பாடுகளும் பழுத்தவையாக இருக்க வேண்டும். மெய்ப்பாடு பழுத்தலாவது 'உய்ப்போன் செய்தது காண்போர்க்கு எய்துதல்' ஆகும். இது நாடக இலக்கணம் சொல்லுவது நடிகன் வீரம் என்ற மெய்ப் பாடு தோன்ற ஆடுகளத்தில் நின்றால் அந்த வீரம் காண்பவர்களுக்கும் வர வேண்டும். அதற்கு மாறாகக் காண்போர்க்குச் சிரிப்பு வருமானால் அந்த மெய்ப்பாடு பழுத்த மெய்ப்பாடு ஆகாது.

தொகைத்தமிழ் என்பது தொகை நூல்கள் செறிந்த சங்கத்தமிழ் என்றபடி. செஞ்சொல்லாட்சி நிறைந்த தாகலின் இவ்வாறு குறித்தார்.

சொல் சுவை பழுத்த தொகைத் தமிழ்க் கவிஞராகத் தம் குருநாதரைக் கண்ட கவிஞர், காவியப் புலவராகக் குருநாதரைக் கண்டு விளிக்கிறார். காவியம் என்பது கதை பொதிந்த தொடர்நிலைச் செய்யுள். கடவுள் அருளாலேயே காவியங்கள் பிறக்கின்றன. இவரே கடவுள். எனவே உலகிலுள்ள எல்லாக் காவியங்களின் கர்த்தாவும் இவரே, நாயகரும் இவரே. 'சமயம் தீர்ந்த தனிப்பொருளைச்'

சுருங்கச் சொல்ல வல்லவர் என்பதனுல் 'கவிஞரே' என விளித்த, ஸ்ரீ சுவாமிகள், அத் தனிப்பொருளை விரிவாகச் சொல்ல வல்லவர் என்பதனுல் காவியப் புலவ என்ருர். காவியங்கள் செய்வாரை வடநூலார் 'விஸ்தார கவி' என் பதும் இங்கு அறியத்தக்கது. காவியங்கள் கற்றவரே வியப் பனவாக அமையும்.

கற்றவர் வியக்கும் காவியப் புலவ!

என்ற இந்த விளி கவித்திறம், அறிவு ஆகியவற்றைச் சுட்டுவன. புலமை என்பது அறிவு. 'புலம் மிக்கவரைப் புலமை தெரிதல் புலமிக்கவர்க்கே புலனும் என்ற பழ மொழி நானூற்றுத் தொடரும் இதனை வலியுறுத்தும்.

அடுத்து, எடுத்துச் சொல்லும் திறத்தை விளக்குகிருர். 'பிரசங்கி' என்று அழைக்கிருர்,

'இணரூழ்த்தும் நாரு மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார்.

என்பது திருக்குறள்.

'எத்துணைய வாயினும் கல்வி இடமறிந்து
உய்த்துணர்வு இல்லெனின் இல்லாகும் - உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை இல்லெனின் என்னுகும் அஃதுண்டேல்
பொன் மலர் நாற்ற முடைத்து.

என்று இவ்வாசிரியர் நீதிநெறிவிளக்கத்தில் அருளியுள்ளார்.

சொல்வன்மை பற்றி நாம் அறநூல்கள் கூறுவன வற்றைத் தொகுத்தால் ஒரு தனிப் பெரும் நூலாகும்.

கவிஞராகச் சுருங்கச் சொல்லவல்ல குருநாதர் காவியப் புலவராக விளங்கவும் சொல்வார். அதுவுமன்றி கேட்பேர் எளிதில் உணருமாறு செவிச்சுவை நல்கித்தக்க

உதாரணங்களுடன் பிரசங்கமாகவும் தருவார். இம்மூன்று வகையினுல் எத்தகு அறிவு வாய்ந்தவராயினும் அவர் உணர்த்த இருக்கும சமயம் தீர்ந்த தனிப் பொருளே எளிதில் அறியலாகும்.

செவிதொறும் செவிதொறும் தெள்ளமுது ஊட்டுபு
கவிஞர்வயின் நிரப்பும் கல்விப் பிரசங்க!

என்ற இந்த விளி மிகச் சுவையானதாகும். அமுதத்தை இவர் செவியில் பாய்ச்சுகிறது, இவர் பிரசங்கம். கருத்து ஊற்றுன கவிஞர்கட்கும் இவர் பிரசங்கம் கருத்துக்களே அளிக்கும், பொழுது போக்கும் பிரசங்கம் என்பது வேறு. இவர் பிரசங்கம கல்விப் பிரசங்கம். ஆழம் மிக்கது; கருத்துச் செறிவு வாய்ந்தது. "கேளாரும் வேட்ப மொழி யும் சொல்" என்ற குறளின் நயம் "ஊட்டுபு" என்ற சொல்லால் உணர்த்துகிருர்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பின்னே காசியில் பிரசங் கம் செய்த காலேயில் துளசி தாசர் இவர் பிரசங்கங்களேக் கேட்டு இராமாயணம் செய்தார். இவரும் "கவிஞர் வயின் நிரப்பும் கல்விப் பிரசங்கியே". குருதேவரை விளித்த விளி இவருக்கும் பொருத்தமாயிற்று. வயின் என்பதற்கு இடம் என்பதே பொருள்.

சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ!
கற்றவர் வியக்கும் காவியப் புலவ
செவிதொறும் செவிதொறும் தெள்ளமு தூட்டுபு
கவிஞர்வயின் நிரப்பும் கல்விப் பிரசங்க

—சிவசிவ

# சித்தாந்த சாத்திரங்கள் வரலாறு

மு. அருணாசலம் M. A.,

சித்தாந்த சாத்திரங்கள் இவையே என்று பழமையாக எங்கும் சொல்லப்படவில்லை. பிற்காலத்தார் கூறுவது போல 14 என்ற வரையறையும் பழமையானதன்று. எந்த ஏட்டுப் பிரதியிலும் இச் சாத்திரங்கள் இன்னவை, இவை 14 என்ற குறிப்புக் காணப்படவில்லை. இருப்பினும் எம்மிடமுள்ள ஓர் ஏட்டுப் பிரதியில் (பனையோலை ஏடு, சுமார் 250 ஆண்டுகளுக்கு முற்பட்டதெனக் கருதலாம்) ஒரு குறிப்பு உண்டு; அதைப்பின்னே தருகிறோம்.

இதுவரை வெளியான சித்தாந்த சாத்திரத் தொகுப்பு (14) மூலம் உரை இரண்டின் பதிப்பு வரலாற்றுப்பின்னே தருகிறோம்

### 1. மதுரை நாயகம் பிள்ளை — மூலம் மட்டும்

முதல் முதல் இச் சாத்திரங்கள் 14 என்று சொன்னவர் முன் கூறியபடி சாத்திரங்களை முதலில் அச்சிட்ட மதுரை நாயகம் பிள்ளை, தமது சிவஞான போத மூலப் பதிப்பின் முகவுரையில், நூல்வரலாறு, நூற்சிறப்பு, நூற்கருத்து நூற்பாடற்தொகை, சூரணித் தொகை என்பன கூறி, பின் ''சைவ சாத்திரம் பதினான்கினையும் உணர்த்தும் வெண்பா'' என்ற தலைப்பில் பின் வரும் வெண்பாவைத் தந்திருக்கிறார்

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்— வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

இவ்வெண்பா, ஏடுகளெங்கும் காணப்பெறாமல், இவர் பதிப்பில் முதன் முதலாகக் காணப் பெறுவதால், சித்தாந்த சாத்திரங்களை இவர் அறிந்தவரை நினைவு கூர்தற் பொருட்டு இவரே புதிதாக எழுதியமைத்துக் கொண்டது என்று நாம் கருதுவதில் பிழையில்லை. இப்பாடல் முதல் அடி ''உந்தி களிறு வுயர் போதம்'' என்ற விடத்துக் களிறுயர் என்று சந்தி சேர்வதால் தளை தட்டும்; ஆகவே

இது "உந்தி களிறே உயர் போதம்" என்று இருத்தற்பாலது என மு. இராகவையங்காரவர்கள் இதைப் பிற்காலத்துத் திருத்தம் செய்தார்கள்.

இனி மதுரை நாயகம் பிள்ளை கருத்தின் படி சித்தாந்த சாத்திரங்கள் பின்வரும் பதினன்கு என்று ஏற்படுகிறது:

1. உந்தி- திருஉந்தியார்: திருவியலூர் உய்யவந்த தேவ நாயனர் செய்தது.
2. களிறு- திருக்களிற்றுப்படியார்: அவர் மாணுக்கர் ஆளுடைய தேவ நாயனரின் மாணுக்கராகிய திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனர்.
3. உயர்போதம்- திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவ நாயனர்.
4. சித்தியார்- சிவஞானசித்தியார்: அவர் மாணுக்கரான திருத்துறையூர் அருணந்திசிவாசாரியர்.
5. (பிந்து) இருபா- இருபாஇருபஃது: அதே அருணந்திசிவாசாரியர்.
6. உண்மை- உண்மை விளக்கம்: மெய்கண்டதேவரின் மற்றெரு மாணுக்கரான திரு அதிகை மன வாசகங் கடந்தார்.
7. பிரகாசம்- சிவப்பிரகாசம்: அருணந்தி தேவரின் மாணுக்கரான மறைஞானசம்பந்த நாயனரின் மாணுக்கரான கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர்.
8. (வந்த) அருள்- திரு அருட்பயன்: மேற்படியார்.
9. (பண்பு) வினு- வினுவெண்பா: மேற்படியார்.
10. போற்றி - போற்றிப்பஃறெடை : ஷ்ை யார்.
11. கொடி - கொடிக்கவி : ஷ்ை யார்.
12. (பாசமிலா) நெஞ்சுவிடு - நெஞ்சுவிடு தூது : ஷ்ை யார்.
13. உண்மைநெறி - உண்மைநெறி விளக்கம் : ஷ்ை யார்.
14. சங்கற்பம் - சங்கற்பநிராகரணம் ; ஷ்ை யார்.

இந்தப் பதினன்கு சாத்திரங்களையும் அவற்றின் உரைகளையும் குறித்த விளக்கம் தொடர்ந்து எழுதி வருவோம். இங்கு, தொடக்கத்தில் சொல்லத்தக்க தோற்றுவாயான சில செய்திகளை மட்டுமே சொல்லிச் செல்வோம்,

மதுரை நாயகம் பிள்ளை வெளியீடு 14 சாத்திரங்களும் 4 பகுதிகளாக வந்தது:

பகுதி 1 மேற்கூறியபடி சிவஞான போதம் சித்தியார் பரபக்கம் சுபக்கம் சிவப்பிரகாசம், வினா வெண்பா.

பகுதி 2 திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார்;

பகுதி 3 சங்கற்ப நிராகரணம்.

பகுதி 4 மற்றவை.

இவை 1866இல் சென்னை இலேசியம் பிரசில் (அட்சய வருஷம்) அச்சிடப்பட்டன.

இன்று நாம் எண்ணிப் பார்க்கும் போது, அன்று 1866 இல் மதுரை நாயகம் பிள்ளை சித்தாந்த சாத்திர மூலங்களை அச்சிட்டது ஓர் அருஞ்செயல். அக்காலத்தில் பொதுவாகச் சாத்திர அறிவு மிகவும் குறைவு. படித்தவர்கள் வேதாந்தமே பயின்றிருந்தார்கள். சித்தாந்த சாத்திரம் பெயர் கூடத் தெரியாத காலத்தில் அவர் எப்படியோ இவற்றை அச்சிட்டார். இதன் முதற்பகுதி முகப்பில் அவர் குறிப்பிட்டிருப்பதை இங்கு எடுத்தெழுதுவது பொருத்தமாயிருக்கும்.

''இச் சைவ சித்தாந்த சாத்திரங்களை அச்சிடுதற்கு உபகாரம் செய்த நமது பலருள் முக்கியராகிய மகா-ா-ா-ஸ்ரீ ஆரணி சந்நியாசி குப்புசாமிச் செட்டியாரவர்கள் அறிவொழுக்கங்களிற் சிறந்தவராய் எச்சமயங்களிலும் சிறந்த நமது சற்சமயமாகிய சைவ சமயப்பயிர் புறச்சமயக் களைகளால் மூடப்பட்டிப்பதையுணர்ந்து அக்களைகளை வேரோடு அகழ்ந்தெறியத் தம்மாற் கூடிய விடா முயற்சி செய்ய வேண்டு மென்று எண்ணங் கொண்டிருப்பதனுல் அவரை நாம் புகழ்வது போலப் புகழாதவர் உலகத்தில் யாவர்?''

இச்சாத்திர வெளியீட்டில் மதுரை நாயகம் பிள்ளைக்கு ஊக்கமளித்தவர் ஆரணி ஜாகிர் காசி நாராயணசாமி முதலியார் என்பவர்.

இவர் பதிப்புக்கள் கையடக்கமான சிறு அளவின், பட்டில் கட்டடம் செய்யப் பெற்றவை;மூலம் மட்டுமே.

2, சண்முகசுந்தர முதலியார் - உரைப்பதிப்பு

மதுரை நாயகம் பிள்ளையை அடுத்துச் சித்தாந்த சாத்திரங்களைப் பதிப்பித்தவர் கொன்றை மாநகரம் (கொன்னூர்) அ. சண்முக சுந்தர முதலியார் அம்பாள். கட்டளைப்படி இவர் ஆகமங்களும் சித்தாந்த சாத்திரங்களும் அச்சிட்டதாகக் கூறியிருக்கிறார். இவர் வரலாற்றை ஆங்கிலத்தில் இந்துப் பத்திரிக்கையில் 1968 ஆம் ஆண்டில் யாம் எழுதியிருக்கிறோம். சைவ மக்கள் சிலை எடுத்துப் போற்ற வேண்டிய பெருமக்களில் இச் சண்முக சுந்தர முதலியார் முதல்வராவார்.

இவர் சித்தாந்த சாத்திரங்களைத் தனித்தனியே பழை உரைகளோடு 1871 முதலான ஆண்டுகளில் தொடர்ந்து வெவ்வேறு அச்சுக்கூடங்களில் அச்சிட்டு வெளியிட்டார். பின்னர் சித்தியார் அறுவருரை அச்சிடும் காலத்திலே தாமே சொந்தமாய் ''சிவஞான போத அச்சியந்திரசாலை'' என்ற பெயரில் ஓர்அச்சகம் அமைத்து அதில் தம்முடைய சித்தாந்த சாத்திரப் பதிப்புக்களையும் சிவாகமப் பதிப்புக்களையும் வெளியிடத் தொடங்கினர்.

இவையன்றி வேறு சில நூல்களையும் இவர் வெளியிட்டு இருக்கின்றார்.

இவர் வெளியிட்ட சித்தாந்த சாத்திரங்கள் யாவும் உரைப் பதிப்புக்கள். யாவும் கையடக்கமான அளவில் அச்சிடப் பட்டு இருந்தன. தமக்குத் தெரிந்தவரை ஆங்காங்கு நூல் உரை பற்றிய குறிப்புக்களை எழுதிச் சேர்த்திருக்கின்றார்.

3. காஞ்சி நாகலிங்க முனிவர் - உரைப் பதிப்பு

இவர் (1865 - 1950) சித்தாந்த சாத்திரங்கள் முழுமையும் உரையுடன் ஒரே தொகுதியாக 1897 இல் பதிப்பித்த பெருமையுடையவர். இவரே முதன் முதல் இச்சாத்திரங்களுக்கு "மெய் கண்ட சாத்திரங்கள்" என்று பெயர் கொடுத்தார்; இவர் பூவை கலியாண சுந்தர முதலியாருடைய மாணக்கர்; அவர் சைவ வேளாளர். இவர் செங்குந்த மரபு. பதிப்புக்குத் தூண்டுகோல் அப்போது திருவாவடுதுறைப் பண்டார சந்நிதியாயிருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிகர். ஆனால் திரவிய சகாயம் செய்தவர் இராமநாத புரம் ராஜா பாஸ்கர சேதுபதி. நூல் சென்னை ஸ்ரீ நிகேதன அச்சகத்தில் அச்சாயிற்று. இப்பதிப்பின் முகப்பில் ''உந்தி களிறு வுயர் போதம்'' என்ற பாடல் தரபபட்டுள்ளது.

இவர் கொன்றை மாநகரம் சண் முகசுந்தர முதலியார் பதிப்பை அப்படியே எடுத்துப் பதிப்பித்துக் கொண்டார். அதிற்கண்ட பயனுள்ள குறிப்புக்கள் பலவற்றை விட்டு விட்டார்; காரணம் புத்தகம் விரிய வேண்டாமென்பதாயிருக்கலாம். அந்த அளவுக்கு, பழைய பதிப்பைவிட இது பயன் குறைவு. தமக்குமுன் அச்சாகியிருந்த மூலப்பதிப்பையோ தாம் பின்பற்றிய உரை பதிப்பையோ குறிப்பிடவில்லை.

(வளரும்)

# ★ மூவரில் ஒருவனா? ★

(சென்ற இதழின் தொடர்ச்சி)

கி. வா. ஜகந்நாதன்

விண்ணப்பம்

அத்தகைய தியாகப் பெருமானிடம், நின் ''திருவடிக்கு இந்த விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறேன்; இதை நீ கேட்டருள்வாயாக!'' என்கிறார்.

நின்
சேவடிக்கு ஒன்று இது செப்புவன்;
கேண்மதி,

[கேண்மதி-கேள்; முன்னிலை]

இறைவனிடம் தலைநிமிர்ந்து நோக்கிச் சொல்லுதற்கு அஞ்சிப் பணிவுடன் அவன் திருவடியை நோக்கிச் சொல்கிறார். இனி, தம்முடைய கருத்தைச் சொல்ல வருகிறார்.

ஓர் இனப்பொருளை ஒருங்கு வைத்து அவற்றின் உயர்வு தாழ்வுகளைப் பற்றிப் பேசுவது மக்கள் இயல்பு. மாமரத்தைவிடத் தென்னை மரம் உயர்ந்தது, கருவேல மரத்தைவிட வாழை மரம் பயன்தருவது என்று மர இனங்களைப் பற்றிச் சொல்லுவார்கள். ஆட்டைவிட மாடு சிறந்தது குதிரையைவிட யானை உயர்ந்தது என்று விலங்கினங்களைப் பற்றிப் பேசுவார்கள். அப்படியின்றி, ''விலங்கினங்களுக்குள் சிறந்தது தேவர்களுக்குரிய மரமாகிய கற்பகம்'' என்று சொல்லுவார்களோ? விலங்கு வேறு இனம், கற்பகம் வேறு இனம்; இரண்டையும் வைத்து ஒப்பு நோக்கும் வழக்கம் இல்லை.

விலங்கினுள் மிக்கது விண்ணவர்
தரு என
ஒருங்கு வைத்து எண்ணுதல்
ஓர் வழக்கு அன்மையின்.

[விண்ணவர்தரு - கற்பகம்; வழக்கு-உலக வழக்கு. அன்மையின்- அல்லாமையினால்.]

ஒத்த சாதியைச் சேர்ந்த பொருள்களையே ஒப்பு நோக்கி, இது உயர்ந்தது, இது தாழ்ந்தது என்று சொல்லுவார்கள். அவ்வாறின்றி ஒவ்வாத சாதியை ஒருங்கு வைத்து ஒப்பிடுதல் வழக்கம் அன்று.

ஒத்த சாதியின் உயர்வும் மற்று இழிபும்
வைத்தனர் அல்லதை வகுத்தனர்
யாரோ!

[உயர்வு - உயர்ந்த தன்மை; இழிபு - தாழ்ந்த தன்மை;

அல்வறை: ஐ. சாரிலய வகுத் தனர்-வகைபடுத்திக் கூறியவர். யாரோ; ஒ, அசை. யார் என்ற வினு யாரும் இல்லே என்ற எதிர் மறைப் பொருளைத் தந்தது ]

உயிர்கள் பலவகைப் பிறப்புகளை எடுக்கின்றன. புழுமுதல் தேவர் கள் வரை அமைந்த அந்தப் பிறப் புக்களை ஒருவகையால் பாகு படுத்தி ஏழு என்று சொல்வர். அவை நிற்பன, நெளிவன, தத்து வன, தவழ்வன, நடப்பன, கிடப் பன, பறப்பன என்பனவாம். ''ஏழுவகைச் சனனத்து எம்ம னேரும்'' என்று சிதம்பர மும் மணிக்கோவையில் இவ்வாசிரியர் இவற்றைச் சுட்டுவார்.

இவ்வாறு உயிர்கள் எடுக்கும் பிறப்புகளுள் உயர்ந்தது தேவர் களாகப் பிறத்தல்.

ஆருயிர்க்கு அமைத்த ஓர்எழு
பிறப்பினுள்
முற்படு தேவருள்.

[ஆர் உயிர்-அருமையான உயிர்.]

அந்தத் தேவர்களுக்குள் முதல் வனுக இருப்பவன் மகாதேவ ஞகிய இறைவன் என்று பழைய வேதத் தொகுதிகள் சொல் கின்றன. மனம் வாக்குக்கு எட்டா மல் கற்பனை கடந்தவனுக இருக் கும் இறைவனை அவ்வாறு புகழ் வதற்குரிய உண்மையான கருத்து யாது என்று தெரியவில்லை; பல முறை ஆராய்ந்தாலும் அவ்வாறு கூறியதன் பயன் இன்னதென்று அறிந்து கொள்ள முடியவில்லை.

தேவருள் முதல்வன் என்று எடுத்துக்
கற்பனை கடந்த கடவுள்நிற் பழிச்சும்
தொல்மறைக் குலங்கள் முன்னியதி
யாதுஎனப்
பல்முறை தெரிப்பினும் பயன்கொள
அரிதால்.

[எடுத்து - வெளிப்படையாகச் சொல்லி. பழிச்சும்-புகழும். தொல் மறை: ''தொடுக்கும் கடவுட் பழம்பாடல்'' (மீனுட்சி யம்மை பிள்ளைத்தமிழ்) சாகைகளால் பலவாதலால் 'மறைக் குலங்கள்' என்ருர். முன்னியது-கருதியது; முன்னியதி யாதென; முன்னியது என்பதன் ஈற்றிலுள்ள குற்றிய லுகரம் யகரம் வந்தமையால் குற்றியலிகரமாகத் திரிந்தது. தெரிப்பினும் - ஆராய்ந்தாலும். அரிது - அருமையாக உள்ளது; ஆல் : அசை.]

இவ்வாறு வேதம் சொல்கிறதே; அதுசரியா? என்று எண்ணப் புகுந்தால், அந்த வேதத்தைச் சிவபெருமானே அருளிச் செய் திருக்கின்ருன். 'தேவர்களுக்குள் ஒருவன் சிவன்' என்று வேதமே சொல்லும்போது அவனைத் தேவ ரினும் மிக்கவன் என்று எப்படிக் கொள்வது?'' என்று சிலர் கேட் கிருர்கள். இறைவனே யாவரும் மயங்கும்படி தன் உண்மை நிலையை மறைத்து, தேவர்களில் ஒருவன் என்று மறைத்துச் சொல்லியிருக்கிருன்.

தேவரின் ஒருவன் என்றி யாவரும் மருளுற

நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்

கூறியது ஆகும்.

[என்றி: இகரம், குற்றிய லிகரம். மருளுற - மயங்க. நிகழாது - வெளிப்படக்கூருமல்.]

வேதத்துக்கு மறை என்று ஒரு பெயர். பல இரகசியங்களைத் தன்னுள் வைத்திருத்தலின் அந்தப் பெயர் அமைந்தது. ஆனல் அதற்கு இப்போது வேறு பொருள் சொல்லத் தோன்றுகிறது. உண்மையை மறைத்துக் கூறியதனல் அந்தப் பெயர் வந்திருக்க வேண்டும். அறிவில் தெளிவு பெற்றவர்கள் நன்ருக, மறை என்று பெயர் வைத்துச் சொல்கிருர்கள்;

ஆதலின்

தேறினர் மறை எனச் செப்பினர் நன்கே.

[தேறினர்-அறிவு பெற்றுத் தெளிந்தோர்.]

வேதம் பலவாறு சொல்லும் போது தெளிவு பிறப்பதில்லை. வேதமென்னும் காட்டுக்குள் புகுந்தால் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொன்றைச் சிறப்பித்துக் கூறுவதைப் பார்க்கலாம். எல்லாவற்றையும் கண்டு உண்மை இதுதான் என்று தெளிதல் மிக அருமை. சிவபெருமானுடைய பரத்துவத்தைச் சொல்லும் உருத்திரம் முதலிய பகுதிகள் வேதத்தில் உள்ளன. என்ருலும் இறைவனை வெவ்வேறு வகையில் வெவ்வேறு வடிவத்தில் சிறப்பிக்கும் போது எது உண்மை என்று புலப்படுவது அரிது. வெவ்வேறு வகையில் கடவுளை வழிபடுபவர்கள் அனைவரும் வேதத்தையே தமக்குரிய மேற்கோளாகக் காட்டுகின்றனர். திருமாலே பரதெய்வம் என்பதற்குரிய ஆதாரங்களை வேதத்தில் காண்கிருேம்; அப்படியே சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்பதற்குரிய ஆதாரங்களும் வருகின்றன. இவற்றைப் பார்க்கும்போது மயக்கம் உண்டாகிறது. இந்திரன் முதலிய தெய்வங்களையும் மிகச் சிறப்பித்து வேதம் சொல்கிறது. இந்த பன்மையிலே ஒருமையைக் காண்பது எப்படி? ஒவ்வொரு பகுதியைத் தம்முடைய மேற்கோளாகக் கொண்டவர்கள் ஒவ்வொரு மூர்த்தியையே மற்ற எல்லாவற்றினும் சிறந்ததாகக் கொண்டு வழிபடுகிருர்கள்; வேதம் முற்றும் உணர்ந்து வேறுபட்ட வகையில் பரத்துவத்தைச் சொல்லும் பாங்கை அறிந்து முரண்பாடு இல்லாமல் தெளிவதற்கு ஒரு வழிதான் உண்டு. இவ்வாறும் வேதம் புகழும் பலதெய்வங்களும் ஒரே பரம் பொருளின் வெவ்வேறு வடிவங்கள் என்று கொண்டால் இந்த முரண்பாடு தோன்ருது.

'எங்கள் ஆசிரியரைப் போன்ற மனிதரை எங்கும் காண முடியாது' என்று ஒருவன் சொல்கிருன்.

'என் தந்தையைப் போல உத்தமரைக் காண்பது மிக அரிது' என்று ஒருவன் சொல்கிறான். 'என் நண்பரைப் போலச் சிறந்த மனிதரை நான் பார்த்ததே இல்லை' என்கிறான் ஒருவன். 'என்ன இருந்தாலும் என் கணவரைப் போல உத்தமரை இதுவரையில் நான் பார்த்ததில்லை' என்கிறாள் ஒரு கற்பரசி.

கடைசியில் ஆராய்ந்து பார்த்தால் அவ்வளவு பேரும் சொல்வது உண்மை என்று தெரிய வருகிறது. காரணம், ஆசிரியராகவும் தந்தையாகவும், நண்பராகவும், கணவராகவும் உள்ளவர் ஒருவரே. இந்த உண்மையைத் தெரிந்து கொண்டால் எல்லோருடைய கூற்றுக்களையும் ஏற்றுக் கொள்வான்.

வேதம் பலபடியாகப் பல தெய்வங்களைப் புகழ்வதைத் தனித்தனியே பார்த்த அளவில் நில்லாமல், எல்லாவற்றையும் பார்த்த பிறகு இந்த உண்மை தோன்றும். இல்லையெனில் வேதம் பல தெய்வங்களைச் சொல்லும் மயக்க நூல் என்று ஆகிவிடும். இந்த நாட்டுக்கே உரிய சைவ வைணவ சமயங்கள் அவ்வாறு சொல்வதில்லை.

'எம்பெருமானே, நீ வாய்மலர்ந்தருளிய வேதமே இப்படி மயங்கும்படி செய்கிறதே. அந்த மயக்கம் நீங்கி உண்மை தெரிந்தவர்கள், உண்மையை மறைத்துச் சொல்வதனால்தான் அதற்கு மறை என்ற பெயரை வைத்தார்கள் போலும்' என்று சொல்கிறார் குமரகுருபரர்.

அழல்அவிர் சோதி முழுவெயில் எறிப்ப
இளநிலவு எறிக்கும் குளிர்மதிக்
குழவியும்,
வெஞ்சினம் பொதிந்த நஞ்சுமிழ்
பகுவாய்
வெள்ளைமுள் எயிற்றுப் பிள்ளைவான்
அரவும்
தெண்திரை கொழிக்கும் தீம்புனற்
கங்கைத்
தண்டுறை மங்குகில் தனிவிளை யாட,
உடன்வைத்து ஆற்றிய படர்சடைக்
கடவுள்!
எறுழ்வலித் தறுகண் தெறுசினக் கேழல்
முளைஎயிறு இலங்க, முருகுகொப்
புளித்துத்
தளைஅவிழ் இதழித் தண்தார் மார்ப!
திருவிழி இரண்டிலும் இருசுடர்
வழங்கலின்
இரவும்நன் பகலும் ஒருபுடை
கிடந்தெனக்
கடம்கலுழ் கரடத் தடங்களிற்று
உரிவையும்
மடங்கல்ஈ ருரிவையும் உடன்கிடந்து
அலமர
விண்பட நிவந்த திண்பு யாசல!
நெட்டிலைக் கமுகில் நெடுங்கயிறு
ஆர்த்துக்
கட்டுபொன் ஊசல் கன்னியர் ஆட அப்
பைங்குலைக் கமுகு பழுக்காய் சிந்த
வெண்கதிர் நித்திலம் வெடித்துகு
தோற்றம்,
கந்தரத்து அழகு கவர்ந்தன இவை என

அந்தில் ஆங்குஅவர் ஆர்த்தனர் அலைப்ப
ஒண்மிடறு உடைந்து ஆங்கு உதிரம் சிந்தக்
கண்முத்து உகுத்துக் கழல்வது கடுக்கும்
தண்டலை உடுத்த ஒண்தமிழ்க் கமலைப்
பொற்பதி புரக்கும் அற்புதக் கூத்த;நின்
சேவடிக்கு ஒன்றுஇது செப்புவன் கேண்மதி:
விலங்கினுள் மிக்கது விண்ணவர் தருஎன
ஒருங்குவைத்து எண்ணுவது ஓர்வழக்கு அன்மையின்
ஒத்த சாதியின் உயர்வும்மற்று இழிபும்
வைத்தனர் அல்லதை வகுத்தனர் யாரோ?
ஆருயிர்க்கு அமைத்த ஓர்எழு பிறப்பினுள்
முற்படு தேவருள் முதல்வன்என்று எடுத்துக்
கற்பனை கடந்த கடவுள்நிற் பழிச்சும்
தொல்மறைக் குலங்கள் முன்னியதி யாதுஎனப்
பன்முறை தெரிப்பினும் பயன்கொள அரிதால்;
தேவரின் ஒருவன்என்று யாவரும் மருளுற
நீயே நின்நிலை நிகழாது மறைத்துக்
கூறியது ஆகும்; ஆதலின்
தேறினர் மறைஎனச் செப்பினர் நன்கே.

நெருப்புப்போல விளங்குகின்ற திருமேனிச் சோதி முழுமையான கதிரவனது வெயிலின் ஒளியை வீச, மெல்லிய நிலாவை வீசும் குளிர்ந்த சந்திரனென்னும் குழவியாகிய இளம் பிறையும், வெம்மையான சினத்தை அடக்கியதும், நஞ்சை வெளிவிடுகின்ற பிளந்த வாயையும், வெள்ளையான முள்ளைப் போன்ற பற்களையும் உடைய இளமையையும் கொலைத் தொழிலையும் உடைய பாம்பும், தெளிவான அலைகளை வீசும் இனிய புனலையுடைய கங்கையின் குளிர்ந்த துறையில் பிறருடைய இடையீடு இன்றித் தனியே விளையாட அவற்றை ஒருங்கே வைத்துச் சுமந்த படரும் சடையையுடைய கடவுளே! மிக்க வலிமையையும் கொடுமையையும் பிறரை அழிக்கும் சினத்தையும் உடைய பன்றியின் மூங்கில் முளையைப் போன்ற கொம்பு விளங்க நறுமணத்தை வெளியிட்டு மொட்டு அவிழ்ந்த கொன்றையை அணிந்த குளிர்ந்த தாரை - மாலைகளைப் புனைந்த மார்பை உடைய பெருமானே! அழகிய விழிகள் இரண்டிலும் சந்திர சூரியர்களாகிய இரண்டு சுடர்களும் நிலவுதலால், இரவும் நல்ல பகலும் ஓரிடத்தில் கிடந்தாற்போல, மதத்தை வெளியிடும் இடங்களையுடைய பெரிய யானையின் தோலும் சிங்கத்தை உரித்த தோலும் ஒருங்கே கிடந்து அசைய, வானளவும் சென்று ஓங்கிய திண்ணிய தோள்களாகிய மலைகளை உடையவனே! நீண்ட இலைகளையுடைய கமுக மரத்தில் நீண்ட கயிறுகளைத் இணைத்துக்

கட்டிய பொன்னுலாகிய ஊசலில் கன்னிப் பெண்கள் ஆட, அந்தப் பசுமையான குலைகளையுடைய கமுக மரங்கள் பாக்குக் காய்களைச் சிந்த, அவற்றிலிருந்து வெண்மையான ஒளியை வீசும் முத்துக்கள் வெடித்துச் சிதறும் காட்சி, நம் கழுத்தின அழகை இவை திருடிக்கொண்டன என்று எண்ணி, அவர்கள் அவற்றைக் கட்டி ஆரவாரம் செய்து உகுத்த, விளக்கமுடைய கழுத்து உடைந்து அங்கே ரத்தம் சிந்தக் கண்ணிலிருந்து முத்துக்களைப் போன்ற நீர்த்துளிகளைச் சிந்தி அழுவதை ஒக்கும் சோலைகள் சூழப்பெற்ற விளக்கமான தமிழ்ப பாக்களால் புகழப் பெற்ற கமலாலய மென்னும் பொலிவையுடைய திருந் தலத்தை அரசனாக இருந்து காவல்புரியும் அற்புதமான அஜபா நடனத்தைச் செய்யும் கூத்தனே! நின் திருவடிக்கு இந்த விண்ணப்பம் ஒன்றைச் சொல்வேன்; நீ கேட்டருள்வாயாக; 'மிருகங்களுக்குள் சிறந்தது தேவர்களின் மரமாகிய கற்பகம்' என்று அவற்றை ஒருங்கே வைத்து எண்ணுவது உலகத்தவரின் வழக்கம் அல்லாமையினால், ஒத்துநிற்கும் இனப் பொருள்களின் உயர்வையும் இழிவையும் வைத்துச் சொல்லுவதை அன்றி வேறுவகையில் சொல்பவர் யார்? அருமையான உயிர்களுக்கு நீ வகுத்த ஏழு வகையான பிறப்புக்களுக்குள், முதலாமவராக உள்ள தேவர்களுள் முதல்வன் நீ என்று தெளிவாக, கற்பனை கடந்த கடவுளாகிய நின்னைப் புகழும் பழைய வேதங்களின் தொகுதி என்ன கருத்தை நினைந்து அவ்வாறு சொல்கின்றன, அவற்றின் எண்ணம் யாது என்று, பலமுறை ஆராய்ந்தாலும் பயன் இன்னதென்று தெரிந்துகொள்வது அரிது; யாவரும் மயங்கும்படியாகத் தேவர்களுக்குள் ஒருவன் நீ என்று நீயே நின் நிலையை வெளிப்படையாகப் புலப்படாமல் மறைத்துச் சொல்லியது அதுவாகும்; ஆகையால் அறிவில் தெளிவு பெற்றவர்கள் அதை மறை என்று நன்ருகச் சொல்கிருர்கள்.

வேதம் சில இடங்களில் பிற தெய்வங்களோடு ஒருங்கு வைத்துச் சிவபெருமானைச் சொன்னலும் அவனே பரதெய்வம் என்பது கருத்து.

இது திருவாரூர் நான்மணிமாலையில் உள்ள 21-ஆவது பாட்டு:

—卐—

''எகர ஒகரத் தியற்கையு மற்றே''
இகர உகரத் தியற்கையு மற்றே

(தொல்-எழுத்-சூ 16)

# மெய்ம்மை யாது?

பேராசிரியர் ச. பாலசுந்தரம் கரந்தைப்புலவர் கல்லூரி.

*0:0* தொல்காப்பிய நூன் மரபில் உள்ள பதினாறும் நூற்பாவின் பாடம் ''எகர ஒகரத்தியற்கையுமற்றே'' என உள்ளது. அதுவே உண்மையான பாடமாகக் கருதி அஃது எகர ஒகரங்களின் வரிவடிவ அடையாளங் கூறுவதாக உரையாசிரியர்கள் பொருள் கண்டுள்ளனர்.

உரையாசிரியர் (இளம்பூரணர்) உரைவழி நின்று இலக்கண நூல் செய்த பவணந்தி முனிவரும் பிறரும் எகர ஒகரம், புள்ளி என்னும் அடையாளம் பெறும் என வரைந்தனர். இன்றைய இலக்கண நூலாசிரியர்களும் மொழி நூலாசிரியருட்பலரும் அவ்வாறே கருதுகின்றனர். கருதிப்பயிற்றுகின்றனர்.

இதன் மெய்மையான பாடம் ''இகர உகரத் தியற்கையு மற்றே'' என்பதாகும். இவ்வாறு பாடம் பிறழ்ந்ததற்குக் காரணம் யாது?

*0:1-0.* இந்நூற்பாவிற்கு முன்னுள்ளவை ''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையில்'' (எழுத்-15) அதற்கு முன்னுள்ள ''உட்பெறு புள்ளி உருவாகும்மே'' (எழு-14) என்னும் சூத்திரங்களாகும். இவ்விரண்டு நூற்பாக்களுக்கும் பழைய உரையாளர்கள் கொண்ட பிழையான உரைகளே காரணமாகும்.

*0:1-1.* மகரக் குறுக்கத்திற்கு ஆசிரியர் கூறிய இலக்கணமாகிய ''உட்பெறு புள்ளி உருவாகும்மே'' என்பதற்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் 'இந்நூற்பா, பகரமெய்க்கும் மகர மெய்க்கும் வரிவடிவ வேற்றுமை கூறுகின்றது' என யாதோரியைபுமின்றிப் பொருள் வரைந்தனர். அஃது அறிவியலுக்குப் பொருதாமை நோக்கி ஒருசாரார் அஃது மகரக்குறுக்கத்தின் வரி வடிவம் பற்றிக் கூறுவதாக் கொண்டனர்.

*0:1-2.* 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையில்' என்பது

உயிர்மெய்க்கும் தனிமெய்க்கும் வரிவடிவ வேற்றுமை கூறுவதாக யாவரும் கருதி அவ்வாறே கற்பித்தும் வருகின்றனர்.

0:1-3 நூன்மரபு இரண்டாம் சூத்திரத்தில் வரும் ''ஆய்தம் என்ற முப்பாற்புள்ளி'' என்னும் தொடரில் உள்ள முப்பாற்புள்ளி என்பதும் வரிவடிவைக் கூறுவ தாகவேயாவரும் கருதியுள்ளனர்.

0;1-4. உயிர்மெய்களின் ஒலிப்பு நிலைபற்றிக் கூறும்,

புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமொ
டுயிர்த்தலும்
ஏனை உயிரொடு உருவுதிரிந்
துயிர்த்தலும்
ஆயி ரியல உயிர்த்த லாரே
[தொல். எழுத்-17]

என்னும் நூற்பாவும் வரிவடி விற்குஇலக்கணங் கூறுவதாக ஒரு சாராரும் வரிவடிவிற்கும் ஒலிவடி விற்கும் இலக்கணங் கூறுவா தாக ஒரு சாராரும் கருதித் தத்த மக்குத் தோன்றிய வாறு விளக்கி வருகின்றனர்.

இவற்றின் மெய்ம்மையறி தற்கு வரிவடிவு-ஒலி வடிவுபற்றிச் சிறிது தேறுதல் நலமாகலின் அவற்றைக் காண்போம்.

1:0-0 மொழி என்பது செவிப் புலனும் ஒலிகளின் தொடர்ச்சி ஆகலின், அவ்வொலிகளை ஆய்ந்து கூறுபடுத்திக் கொண்ட தனி ஒலிகளே எழுத்தென்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்த கருத் தாகும்,

1:0-1. அங்ஙனம் செவிப்புலனு கும் எழுத்து ஒலிகளைக் கட் புலனுகும் வண்ணம் குறியீடு செய்து கொண்டாலன்றி, மொழி யைப் பயிலவோ பயிற்றவோ இயலாதென்பதும் யாவர்க்கும் உடன்பாடேயாம்

1:0-2. எந்த ஒரு மொழியினரும் தாம் ஒலிக்கும் ஒலிகளை எல்லாம் எழுத்தாக எண்ணி அமைத்துக் கொள்ளவில்லை; அஃது இயலாத தோடு பயனுடையதும் அன்று.

எந்த ஒரு ஒலி குறியீடு செய்து கொள்வதற்கு வாய்ப் பாக உளதோ அதனையே எழுத் தாக அமைத்துக் கொண்டுள் ளனர். அதனுனே பண்டை யாசிரியன் மார்

''எழுதப்படுதலின் எழுத்தே''
(யா. கா.)

என விளக்கிச் சென்றனர்.

1:0-3. அஃதாவது மொழிக்கு உறுப்பாக எழுதப்படுவதற்குரிய ஒலி எதுவோ அதுவே எழுத் தென்பது கருத்து. அதனுன் செவிப்புலனுகும் ஒலியை ஓசை என்பது போலக் குறியீடு செய் யாமல் 'எழுத்து' எனக்குறியீடு செய்தனர். எனவே எழுத்தென் பதன் பெயர்க் காரணமும்

இதனாற் புலனாகும் (இது பற்றிய விரிவான விளக்கத்தைக் குறியீட்டு விளக்கம் என்னும் கட்டுரையில் காண்க.)

1:0-4. இம்மரபால் தொல்லாசிரியன்மார் ஒலி வடிவையும் வரிவடிவையும் ஒற்றுமையாகவும் (அபேதம்) வேற்றுமையாகவும் (பேதம்) இருநிலைமையவாகவும் (பேதா பேதம்) கொண்டு இடத்திற்கேற்ப இலக்கணம் வரைந்து சென்றனர்.

1:0 5 அம்முறைமையால் ஒலி வடிவிற்குக் கூறும் இலக்கணம் பெரும் பான்மையும் வரிவடிவிற்கும் பொருந்துமாறு அமைந்துள்ளது அஃதாவது.

மொழிப்புணர்ச்சி பற்றிய விதிகளைக் கூறுமிடத்து மெய் பிறிதாதல், மிகுதல், குன்றல், இயல்பு என நான்கு இயல்புகளுள் இவ்வெழுத்து மிகும் என்றால் மிக்கொலிப்பதொடு வரிவடிவிலும் அவ் எழுத்து எழுதப்படுகிறது. குன்றும் என்றால் அதனை ஒலிக்காததொடு வரிவடிவிலும் நீக்கப்படுகிறது. திரியும் என்றால் திரிந்த எழுத்தை ஒலிப்பதொடு வரிவடிவிலும் எழுதப்படுகிறது:

1:0.6 ஆயினும், ''நீளும்'' ''குறுகும்'' என்னுமிடத்து நீட்டியும் குறுக்கியும் ஒலிப்பதன்றி அவ்வரிவடிவை நீட்டுதலும் குறுக்குதலும் செய்வதில்லை: அவ்வாறு நீண்டதற்கும் குறுகியதற்கும் அவ் எழுத்துக்களில் சிறிது. மாற்றம் செய்யப்படுகிறது இனி அவ்வரிவடிவங்கள் எவ்வாறு அமைகின்றன என்பதைக் காண்போம்.

1:0.7 ஒலிவடிவத்தின் அடையாளமாகிய வரிவடிவத்தை அவ்வொலி எங்கு எவ்வாறு பிறக்கின்றதோ அப்பிறப்பமைதி நோக்கி அமைத்துக்கொள்ளுதல் சிறப்பாகும். எனினும், அந்நெறியை முழுமையாகப் பின்பற்றுவது இயலாததாகும். அதனால் கருவிகளின் வாய்ப்பிற்கேற்ப அவ்வம் மொழியறிஞர்கள் அமைத்துத்தரும் அடையாளங்களை அவ்வம் மொழியாளர்கள் பின்பற்றிவந்தனர் வருகின்றனர், இதுமரபு.

1:0 8: அதனால், வரிவடிவங்கள் மொழிதொறும் காலந்தொறும் வேறுபட அமைகின்றன. மிடற்றுப் பிறந்த வழியால் அங்காத்தலால் எழும் ஒலியாகிய அகர உயிர் ஒன்றே மொழிதொறும் வடிவால் வேறுபடுகிறது ஒரே மொழிக் கண்ணும் காலத்தால் வேறுபடுகின்றது.

1:0.9 எனவே, வட்டம் கோணம் வளைவு நெளிவு குழைவு முதலாய கீற்றுக்களால் வரி

வடிவை வரையறை செய்வது நிலையாதது மட்டுமன்றி அறிவியலுக்கும் ஒவ்வாதது. ஆதலின் மெய்யறிபனுவல் செய்த தொல்காப்பியர் ஒலிவடிவிற்குக் கூறிய இலக்கணங்களை (பிறப்பியலுள் கூறப் பெறுவனயாவும் ஒலிவடிவிற்கேயாகும்) ஒப்பக்கூறல் என்னும் உத்திவகையால் வரிவடிவிற்கும் கொள்ளவைத்துள்ளாரே யன்றித் தனித்துத் தம நூலுள் வரிவடிற்கும் இலக்கணங்கூறினரில்லை. வரிவடிவ இலக்கணம் சிற்ப, ஓவியங்களுக்கு உரியதேயன்றி ஒலியிசைகட்கன்றென்பதை உணர்தல் வேண்டும்.

1:0.10 ஆசிரியர் வரிவடிவிற்கும் சிறுபான்மை இலக்கணங் கூறினர் எனக்கொள்வோமெனின், அவர்தம் காலத்தில் வழங்கிய வரிவடிவத்தினை வைத்தே கூறியிருத்தல் வேண்டும். தொல்காப்பியர் காலத்தைக் கி.மு 700 முதல் கி.மு. 300 வரை பலவாறாகக் கூறுகின்றனர். கீழ் எல்லையாகிய கி. மு. மூந்நூறு என வைத்துக் கொள்ளினும் அக்காலத் தமிழ் வரிவடிவம் யாதெனக் காணுதல் வேண்டும்.

1;0.11 பழங்கால வரிவடிவங்களைப் பற்றியாப்பருங்கலவிருத்தி உரையில் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. அவை சித்திர எழுத்து - கண்ணெழுத்து - கோலெழுத்து வட்டெழுத்து என்பன தொல்பொருள் ஆய்வினர் சில வகை எழுத்துக்களைக் கண்டு கூறியுள்ளனர் இவற்றுள் தொல்காப்பியர். காலத்து எழுத்து எது என்பதை யார் வரையறை செய்தனர்?

1:0.12 தொல்காப்பியர் காலத்தில் வட்டெழுத்துக்கள் வழங்கி இருக்கலாம் என்பர் ஒரு சாரார். ஒருசாரார் தமிழ்பிராமி எவ்பர். ஒரு சாரார் தமிழி என்பர். இவற்றுள் எதுவாயினும் அதன்கண் மெய்யெழுத்துக்களுக்கு மேற் படுக்கை அல்லது நேர்க்கீற்று காணப்படுகின்றதா, எகர ஒகரங்களின் மேற்காணப்படுகின்றதா? எனின் இல்லை என்பதே நேர்மையான விடையாக உளது.

1 0.13. இளம்பூரணர் கால எல்லையில் 10, 11, 12 ஆம் நூற்றுண்டுக்கல்வெட்டு எழுத்துக்களில் அவர்கூறும் பகர மகர வேறுபாட்டு அடையாளங்கள் காணப் பெறுகின்றன. மெய் யெழுத்துக்களின் மேலும் எகரஒகரத்தின் மேலும் கீற்று அடையாளம் காணப் பெறவில்லை.

1:0.14. பிற்கால, இக்கால ஓலைச்சுவடி எழுத்துக்களில் பெரும்பாலும் மெய்யெழுத்திற்குக் கீற்றோ சுழியோ காணப்பெற வில்லை. இங்ஙனம் காலந்தோறும் வேறுபடும் வரிவடிவத்திற்கு ஒலியமைதிகளைப்பற்றி இலக்கணம்

கூறிவரும் வரிசையில் இடையே வரிவடிவ இலக்கணம் கூறினர் கூறியுள்ளார் என்பது பொருந்து மாறில்லே.

1: 0, 15- மற்றும் உயிர் எழுத்து வரிசையில் அகர ஆகாரமும் உகர ஊகாரமும் வரிவடிவில் ஒன்ரு கவே உள்ளன. நெடிலாக வேறு படுக்கும் சிறு அடையாளங்களே உள பழைய- இக்கால வரிவடிவங் களில் மெய்யெழுத்துள் பல வடிவ ஒற்றுமையுடையனவாக உள. கச, தந, லவ, முதலியவை ணகர னகரத்திற்கு ஒரு சுழி வட்டமே வேறுபாடு. இவற்றை எல்லாம் விட்டுவிட்டுப் பகரத்திற்கும் மகரத்திற்கும் எகரத்திற்கும் ஒகரத்திற்கும் மட்டு வேறுபாடு கூறினர் எனக் கொள்வது தருக்கத்திற்கு ஒவ்வாததாகும்.

அன்றி ஒருசில ஆய்வாளர் கருதுவது போல வடமொழியில் (ஆரியத்தில்) ஏகார ஆகாரங்களே உள. எகர ஒகரமில்லே. தமிழில் மட்டுமே எகரஒகரங்கள் உள. ஆதலின் அவ்வேறுபாடுகருதி மாத்திரைக் குறைவைக் காட்டும் புள்ளி யிடப்பட்டது. எனக் கொள்ளின் வடமொழியில் இல்லாத ற-ன-ழ என்னும் மெய் யெழுத்திற்கும் அடையாள இலக்கணம் கூறியிருத்தல் வேண்டும். இவையாவும் ''மெய்யின் இயற்கை புள்ளி யொடு நிலேயல்'' என்னும் நூற் பாவின் உண்மைப்பொருளேக் காணுத குறையால் நேர்ந்த இடர்ப்பாடுகளேயாகும்.

1: 0. 16. தொல்காப்பியர் கூறும் மெய்-உரு என்னும் சொற் களுக்கு உரையாளர்கள் வரிவடிவம் எனப்பொருள் கொண்ட காரணத்தால் எழுத்ததிகாரத்தில் சில நூற்பாக் களேத் திருத்திக் கொண்டமை யோடு பல நூற்பாக்களுக்குப் பிழையுரை கூறவும் நேர்ந் தனர்.

ஆசிரியர் இச் சொற்களே வழங்குமிடங்களே ஊன்றி நோக்கின் எழுத்துக்கள் பிறக்கும் வாய் உறுப்புகளின் அமைப்பை யும் அவ்வழி எழுத்துக்கள் உரு வாகும் நிலேயையுமே கூறுகின்ருர் என்பது புலனும்.

❀❀❀

இனி இந்நூற்பாக்களின் செம் பொருளேக் காண்போம்.

2: 00. ''உட்பெறு புள்ளி உரு வாகும்மே'' என்பதன் பொருள் மகரக் குறுக்கமாகிய எழுத்து, வாயின் உள்ளே அமைந்து ஒடுங்கிப் பெறும் ஒலியளவால் உருவாகிச் செவிப்புலனுகும் என்பதாகும்.

2: 01- குறுகாத முழுமகர மாகிய அரைமாத்திரை அள வுடைய மகர எழுத்து வாயின் இதழ்கள் நன்கு பொருந்திய

நிலையில் உருவாகும் இக்குறுகிய மகரம் உள்ளடங்கிக கால் மாத்திரையளவு ஒலிப்பதாகலின் அவ்வொலி குறைதற்கு ஏற்படும் இயையாமல் புடைபெயர் கின்ற நிலையில் நிற்கும். அந்நிலையே உட் பெறும் உரு. அவ்வொலியே உட்பெறுபுள்ளி (புள்ளி என்பது ஒலியாகும்) அவற்றையே ''உட் பெறுபுள்ளி, உரு, ஆகும்'' என்றார். இவ்வாறே முழுமகர உருவைப் பிறப்பியலில் ''இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்'' எனக் கூறினார்.

2: 02 இதனைப் பிறப்பியலில் கூறாமல் ஈண்டுக் கூறியதற்குக் காரணம்'' ''அரையளபு குறுகல் மகரம் உடைத்தே'' என்றதனுன் அதன் ஒலி வடிவையும் சுருங்கச் சொல்லல் என்னும் அழகும் ஒரு வழிக் கூறல் என்றும் உத்தியும் பற்றி அதனுன் சேர்த்துக் கூறினார் என்க.

2: 03. அடுத்து. ''மெய்யின் இயற்கை புள்ளியொடு(ம்) நிலையல்'' என்பதன் பொருள் வருமாறு:-

மெய்யெழுத்துக்களின் தன்மையாவன ஒலிப்புடையன வாகியும், ஒலிப்பின்றி உருவுற்ற நிலையில் அமைவனவாகியும் நிற்றலாம். என்பது.

புள்ளியொடும் என்னும் எச்சவும்மை மெல்லினம் வரக் குன்றியது. அஃதாவது, மெய்யெழுத்துக்கள் உயிர்கட்டும் உயிர்மெய்கட்டும் பின்னர் அவற்றைச் சார்ந்து ஒருமொழியின் இடையிலும் ஈற்றிலும் நிற்குங்கால் அவை (அரை மாத்திரை) ஒலிப்புடையனவாய் நிற்றலும், தன்னைச் சுட்டும் நிலையில் சாரியை அகரத்தை ஏற்கவும், மொழிமுதற்கண் வருங்காலை உயிர் எழுத்துக்களை ஏற்கவும், நிறுத்த சொல்லின் ஈற்றில் நின்று குறித்து வருகிளவியின் முதல் உயிரை ஏற்கவும், அவற்றை நோக்கியிருக்கும் நிலைமையில் ஒலிப்பில்லாதவனவாய் நிற்றலும் அவற்றின் தன்மை என்பது கருத்து. எனவே, இந்நூற்பாவின் பின் நிற்கும் நூற்பா இகர உகரத்தியற்கையு மற்றே என்பதுதான் என்பதை இனிக் காண்போம்.

2: 04 ''மெய்யின் அளபே அரை என மொழிப'' என்ற இலக்கணத்தைச் சார்பெழுத்துக் கட்கும் எய்துவிக்க ''அவ்வியல் நிலையும் ஏனைமூன்றே'' என மாட்டேற்றிக் கூறினார். அம்முறைமையால் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் அரை மாத்திரை ஒலிக்கும் இயல்பினை உணர்த்த மெய்யோடு மாட்டேறிந்து ''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்'' என்பதன் பின் ''இகர உகரத்தியற்கையு மற்றே'' என்று கூறினார்.

2: 04 சார்பெழுத்து மூன்றனுள் ஆய்தத்தை விட்டு இவற்றை மட்டும் கூறியதற்குக் காரணம் நூன்மரபு இரண்டாம் நூற்பா விலேயே ஆய்தம் என்ற முப்பாற் ''புள்ளி'' எனக் கூறிவிட்ட மையால் என்க.

இகரஉகரம் என்பவை குற்றிய லிகரத்தையும் குற்றியலுகரத் தையும் எவ்வாறு குறிக்கும் எனின். மேல் ''அவ்வியல் நிலையும் ஏனைமூன்றே'' என நின்ற அதிகாரத்தால் குறித்ததுஎன்க.

2 05 இங்ஙனம் மெய்யெழுத் திற்குரிய இலக்கணத்தைச் சார் பெழுத்திற்கும் மாட்டேற்றிக் கூறுவதைப் பின்வரும் ''மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்'' (புணர் -2) என்பதை அடுத்துக் ''குற்றியலுகரமும் அற்றென மொழிய'' (புணர்)- 3 எனக் கூறு வதால் அறியலாம். ஈண்டுக் குற்றியலுகரத்தை மட்டும் கூறியதற்குக் காரணம் சார்பு மூன்றனுள் இது மட்டுமே மொழி யிறுதியில் வருதலின் என்க.

2:06 வரிவடிவைக் கூறுவது ஆசிரியர் கருத்தாக இருப்பின் ''உள்ளுறுபுள்ளி வடிவாகும்மே'' ''மெய்யின் வடிவே புள்ளியுற்ற மையும்'' என்றுற்போலக் கூறி யிருப்பார். இயற்கை (இயல்கை) என்னும் சொல் தன்மையைக் குறித்தலன்றி வடிவத்தைச் சுட்டுதல் என்பது தகவாதல் இல்லை.

2: 07 எனவே, யாதோரியையு மின்றி ''எகரஒகரத்தியற்கையு மற்றே'' எனக் கொண்டபாடம் ''மெய்யின் இயற்கை புள்ளி யொடு நிலையில்'' என்பதற்குக் கொண்ட பிழையான பொருள் காரணமாகத் திரிக்கப்பட்ட தென்பதும், நூன்மரபிற்கும் மொழியியலுக்கும் ஒத்த ''இகர உகரத்தியற்கையுமற்றே'' என்னும் பாடமே மெய்ம்மை யான தென்பதும் புலனாகும்.



## வாசகர்களுக்கு

இலக்கண உலகில் புதுமையான கருத்துக்கள் நிறைந்த கட்டுரை இது. எனவே கருத்துக்களை நன்கு சிந்தித்துத் தங்கள் கருத்துக்களை எழுத வேண்டுகிறேன்.

நி. ஆ-ர்.

வின்ஸ்டன் சர்ச்சிலின் ஒரு அநுபவமும் ஒரு கூற்றும்



# உஷாராக இருக்கவும்

**கோ. வன்மீகநாதன்.**

''நல்ல புத்தகங்களை மிகச் சிறுவராக இருக்கும் போது மிதமிஞ்சிப் படிப்பது தவறு. மதிக்கத்தக்க புத்தகங்கள் அனைத்தையும் தான் படித்து விட்டதாக ஒருவன் ஒரு சமயம் என்னிடம் கூறினான். அவனைத் துருவிக் கேட்டதில் அவன் பலபுத்தகங்களைப் படித்திருந்தவனாகவே காணப்பட்டான். ஆனால் அவை அவன் மனத்தில் பதியவில்லை. அல்லது மேலெழுந்தவாரியாக அவன் மனத்தில் பதிந்திருந்தன என்பதும் தெரியவந்தது. அவற்றில் எத்தனை அவன் புரிந்து கொண்டான்? எத்தனை அவன் மன அமைப்பில் மாறுபாட்டைச் செய்திருந்தன? அவனுடைய மனமாகிய கொல்லன் பட்டரை மீது அவற்றின்கருத்துக்களில் எத்தனை செம்மட்டி கொண்டு அடிக்கப்பட்டிருந்தன, அதன் பிறகு அவனுடைய அறிவாகிய பாசறையில் பளபளப்பான ஆயுதங்களாக அவற்றுள் எத்தனை பிற்காலத்தில் வைக்கப்பட்டுப் போற்றப்பட்டு வந்தன, கைக்கு உதவியான கருவிகளாக.

வாழ்க்கையின் ஆரம்பத்தில் மிகச் சீக்கிரமாக ஒரு நூலைப்படிப்பது மிகவும் பரிதாபகரமான விஷயம். முதல் முதலாக அவன் மனத்தில் பதியும் முத்திரையே மிகவும் முக்கியமானது. அது அல்பமாகயிருக்குமாயின் இதற்கு மேல் பிற்பாடு வளர்ச்சி ஏற்படும் என்று நம்புவதற்கு மாறாக இதைவிட அதிகம் எதிர்பார்க்க முடியாது. பிற்காலத்தில் அவன் அந்நூல் மறுபடியும் படிக்க நேர்ந்தால், முன்னமே, அறிவு முதிர்வதற்கு முன்பேஉண்டாகிய தொடர்பின்காரணமாகக் கடினமாகிவிட்ட மேற்பரப்பிலிருந்து, அந்நூல் எகிரி அவன் மேலேயே பட்டுப்புண்படுத்தலாம். இளைஞர்கள் தாம்படிக்கும் புத்தகங்களைப் பற்றி மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும், வயதுமுதிர்ந்தோர் தாம் உண்ணும் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருப்பது போல. அவர்கள் மிதமிஞ்சி அதிகமாக உண்ணக் கூடாது: உண்டதை மிகநன்றாக மென்று தின்ன வேண்டும்.''

இப்படிக் கூறுகிருர் சர்ச்சில். இவருக்குப் பிறந்தமேனியாக இருந்து தம் வேலேகளேக் கவனிப்பது மிகப்பிடித்த தொருபழக்கம். ஒருமுறை இவர் குளியலறையிலிருந்து பிறந்தமேனியாகத்தன் அறைக்குச் சென்று கொண்டிருந்தார். இவர் அப்பொழுது அமெரிக்காவில் அமெரிக்க ஜனுதிபதியின் வொயிட் ஹவுஸ் என்ற மாளிகையில் விருந்தினராக இருந்தார். அன்று பார்த்துத் தற்செயலாக ரூஸ்வெல்ட் என்ற ஜனுதிபதி இவரைக் காண வந்துவிட்டார். இவருடைய திகம்பரகாட்சியைக் கண்டு முகம் சுளித்தார். சர்ச்சில் தமக்கே உரிமையான நகைச்சுவைத் திறமையைப் பயன்படுத்தி 'இங்கிலாந்தின் முதல் மந்திரிஅமெரிக்காவின் ஜனுதிபதியினிடமிருந்து ஒழித்துவைக்கும் விஷயம் எதுவுமே இல்லே'' என்றுகூறி,''வாரும் என் அறைக்குச் செல்வோம்'' என்று அழைத்துச் சென்ருர்.

சர்ச்சிலின் இந்தக்கூற்று 1982ம் ஆண்டு மார்ச்சு மாதத்தின் இதழாகிய ரீடர்ஸ் டைஜெஸ்டில் வெளிவந்துள்ளது. அவர்களுக்கு நன்றிகூறி மொழிபெயர்த்து அனுப்பியிருக்கிறேன்.

இந்தக்கூற்றை நேற்றிரவுதான் படித்தேன். ஆயினும் 1962 பிப்ரவரி மாதம் ஒரு சபதம் செய்து கொண்டது நினேவுக்கு வந்தது. திருவாசகத்தைப் பற்றி மேடையேறிப் பேசுவதில்லே என்பதே அச்சபதம். இந்த முடிவு எடுத்ததற்கு மூலகாரணமாக இருந்தவர்கள் தவத்திரு குன்றக்குடி அடிகளாரும், உயர்திரு வஜ்ஜிரவேலு முதலியாரும் ஆவர். நான் பேசப்பேசஅவர்கள் இருவரும்சுவாரசியமாகத்தங்கள் விஷயங்களேப் பேசிக் கொண்டிருந்தார்கள். உடனே மூன்று காரணங்களால் மேலே கூறிய முடிவுக்கு வந்தேன். ஒன்று என் தகுதியின்மையால் திருவாசகத்தைத் தவருகக் கூற, அதைக் கேட்ட ஆள் பிறிதொரு நாள் பேரறிஞர் ஒருவர் பேசுவதாக அறிந்துங்கூட ''ஆமாம் ஐயா 62இல் இதைப்பற்றி வன்மீகநாதன் பேசக் கேட்டேன் பயனற்ற விஷயம்'' என்று கூறி அந்தப் பேரறிஞரின் உரையைக் கேட்கும் வாய்ப்பை இழக்கலாம். இரண்டாவதாக திருவாசகத்தைப் பக்குவமில்லாத ஒருவனுக்குக்கூறிஅவன் மனத்தில் தவருன கருத்தைப்பதித்துப் பின்னர் அவன் தகுதிபெற்ற பிறகும் கூட திருவாசகம் பக்கமே செல்லாமல்செய்யக்கூடும்.இறுதியாக, திருவாசகம் எல்லோருக்கும் எக்காலத்தும்;எடுத்துரைக்கும்விஷயமன்று என்பதாகும். இதை 1920ல் மாம்பழத் திருநாள் விழாக் கூட்டத்தில் நடந்த சொற்பொழிவில் தலேமை வகித்த வாலயா

னந்த சுவாமிகள் பண்டிதமணி கூறிய சில உரைகளை மறுத்துக் கூறியதைக் கேட்டு வெகுண்ட சிலர் அவரை, ''அப்படியானுல் தாங்கள் உரை கூறுங்கள'' என்ற போது, கம்பீரமாகக்கூட்டட்தை ஒரு நோட்டம் விட்டு விட்டு ''உண்மையான உரையைச் கேட்கத் தகுதியுள்ளோர் இங்கு யாருமே இல்லை'' என்று விடை அளித்தாராம். துறவிகளைப்போல பேராண்மையுடையோர் யாரு மில்லை அல்லவா? அவர்கூற்றுல் வெகுண்டவர்கள் பலர், நூற்றுக் கணக்கானவர்கள். வெகுளா தவர் ஒருவரே. அவர் தாம் பண்டிதமணி மகாமகோபாத் தியாய கதிரேசஞ் செட்டியார். அவர் அவ்வறிவுரையை இறை வனின் ஆணையே போல் ஏற்றுத் திருவாசகத்தை நன்கு பயின்று ஒப்புயர்வு அற்ற திருச்சதக வுரையைச் சைவ உலகுக்கு, தமிழு லகுக்கு அருளினுர்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## ஆலய பூஜைப் படிக்காசு நிதி

(நிதி அளித்த அன்பர்களின் பட்டியல்)

| | |
|---|---|
| 2-5-82 வரை கூடுதல் | 14019 - 10 |
| T. சுப்பையா பிள்ளை B. A. சென்னை | 100-00 |
| K. கல்யாணசுந்தரம், மாயவரம் | 25-00 |
| G. S. முத்துச்சாமி, நரசிங்கன்பேட்டை | 5-00 |
| S. R வெங்கட்ராம், சென்னை | 5-00 |
| V. K. மவுத்தராசு, | 5-00 |
| N. S. பாலசுப்ரமணிய செட்டியார், குடந்தை | 5-00 |
| துர்க்கா குடில் அப்பு, குடந்தை | 5-00 |
| T M. வெள்ளைவாரணம், திருப்பனந்தாள் | 10-00 |
| 4-6-82 வரை கூடுதல் | 14179 10 |

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., திருப்பனந்தாள்

மாயை : சுத்தமாயை

21. உன்னல்அரும் பரசிவன்தன் அருளாலே நாதம்
உதிக்கும்மிகும் குடிலைதனில் விந்துவரும் நாதம்
தன்னில்அதின் ஒளிவளரும் சதாசிவராம் அவரில்
தயங்கவரும் ஈசர்வித்தை தனைஅளிப்பர் அதனால்
மன்னும்அவர்இவ் வகைஐவர் வாய்மையினால் முன்னே
வந்திடும் என்றுரைசெய்த விந்துவழா வகையே
முன்உதவும் சூக்குமாதி ஒருநான்கும் என்று
மொழிந்திடுவர் அருங்கலைகள் முதிர்ந்து ளோரே.

(தெ-ரை) மனத்தால் நினைத்தற்கரிய பரம்பொருளின் அருளால் மேலான சுத்த மாயையாகிய குடிலையில் நாத தத்துவம் தோன்றும். அந்த நாததத்துவத்திலிருந்து விந்து தத்துவம் தோன்றும்; அந்த விந்துவிலிருந்து ஒளிமிகுந்த சாதாக்கிய தத்துவம் தோன்றும். சாதாக்கியத்திலிருந்து மகேசுர தத்துவம் விளங்கித் தோன்றும். அது சுத்த வித்தியாதத்துவத்தைத் தோற்றுவிக்கும். அவ்வாறு ஒன்று ஒன்றிலிருந்து தோன்றுவதால் அத்தத்துவங்களின் பெயரே தம் பெயராகக் கொண்டு இலங்தும் தலைமைப்பாடுடைய ஐவர் அவற்றைப் பொருந்தி நிற்பர் அந்த நாத தத்துவத்தில் இறைவனது தொழிலாற்றல் பொருந்தித் தொழில் செய்தலால் தோன்றும் என முன்கூறிய விந்து தத்துவமானது, தவறாது முதற்கண் சூக்குமை முதலிய நால்வகை வாக்கினையும், தோற்றுவிக்கும் என அரிய சிவாகம நூல்களைக் கற்று முதிர்ந்தோர் கூறுவர்;

உன்னல் - நினைத்தல். அருள் - சத்தி : ஆற்றல். ஈண்டுத் தொழிலாற்றலைக் குறிக்கும், குடிலை - சுத்த மாயை. 'மிகும் குடிலைதனில் நாதம் உதிக்கும்' என மாறுக 'நாதந்தன்னில் விந்துவரும்' என மாறுக. தயங்க - விளங்க. உயிர்களின் அறிவை மயக்கி விளக்குவதால் மாயை எனப்படும். உலகம் ஒடுங்கித் தோன்றுதற்கு

இடனுய் நிற்றல்பற்றி மாயை எனப்பட்டதுமாம். மா - ஒடுக்கம்: யா - தோற்றம். இம்மாயை சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என மூவகைப்படும். சுத்தமாயையைக்குடிலை, மகாமாயை, குண்டலினி, பரமாயை என்றும் கூறுப. அசுத்த மாயையை அதோ மாயைமோகினி, சூக்குமப் பிரகிருதி என்றும் கூறுப. சிவபரம்பொருள் அறிவாற்றலைப் (ஞான சக்தியைப்)பொருந்துதலால் சிவமும், தொழி லாற்றலைப் (கிரியா சக்தி) பொருந்துதலால் சக்தியும், இவ் விரு வகை ஆற்றலையும் ஒப்பப் பொருந்துதலால் சாசிவமும், தொழில் மிகுந்து அறிவு குறையப் பொருந்துதலால் மகேசுரரும், அறிவு மிகுந்து தொழில் குறையப் பொருந்துதலால் சுத்தவித்தையும் ஆக ஐவரும் அவ்வவ் வாற்றல்களின் வடிவாகத் தோன்றியருள்வர். இச்சுத்த தத்துவத்திலிருந்து நிவிர்த்தி முதலிய ஐங்கலைகளும், இருநாற்று இருபத்து நான்கு உலகும் தோன்றும். கலை, தத்துவம், புவனம் ஆகிய மூன்றும் பொருளுலகாம். இவையன்றி விந்து விலிருந்து சூக்குமை, பைசந்தி, மத்திமை வைகரி எனும் நால்வகை வாக்குகளுந் தோன்றும்.

அசுத்த மாயை

22. உருஆதி சதுர்விதம்ஆய் ஒன்றுஒன்று ஒவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்றாய் என்றும்
அருவாகிக் கன்மாந்தம் அணுக்கள் யார்க்கும்
ஆவாரம் ஆய்அசித்தாய் அசலம் ஆகி
விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்து அடைவின் மேவியவை ஒடுங்க
வருகாலம் உயிர்கள்எல்லாம் மருவுஇடமாய் மலமாய்
மன்னியிடும் அரன்அருளால் மாயை தானே.

(தெ-ரை) அசுத்தமாயையானது தன் செயற்பாட்டினுல் உடல் கருவி உலகு நுகர்பொருள் என்னும் நால்வகைப் பொருள்களாய்ப், பருப்பொருளும் நுண்பொருளும் ஆகிய தன்மையால் ஒன்றற்கொன்று ஒவ்வாத இயல்பினையுடைய தத்துவங்களாய்க், காரண நிலையில் அழி யாததாய், ஒன்றாய், என்றும் கண்ணுக்குப் புலனாகாததாய், வினை நீங்குமளவும் அனைத்துயிர்களுக்கும் மயக்கம் செய்வதாய், அறிவற்ற தாய், நடுக்கற்றதாய் தன்னிடத்தினின்றும் விரிந்த பொருள்களில் யாண்டும் நீக்கமற நிற்பதாய், தன் செயற்பாடுகள் விரிந்து தோன்றிய நிலையில் மீண்டும் ஒடுங்கவரும் அழிவுக் காலத்து உயிர்கள் பொருந்தி யிருத்தற்கு இடனாய், மும்மலங்களுள் ஒன்றாய், இறைவனின் அருளால் செயற்படுத்தப்படுவதாய் நிலைபெற்று நிற்கும்.

மலங்களொடு விரவித் தூய்மையற்று இருத்தலின் அசுத்தமாயை எனப்பட்டது. உரு-உடல். உடல் கருவி உலகு நுகர்பொருள் என முறையே கூறப்பெறுதலின் 'உருவாதி' என்றார். சதுர்விதம்–நால் வகை. அசுத்தமாயையின் செயற்பாடாக விளங்கும் பொருள்களின் பல பருப்பொருளாக விளங்கும் நிலம் நீர் தீ மெய் வாய் கண் மூக்குச் செவி முதலியன கண்ணுக்கும் புலனாதல் காண்க. சிலநுண் பொருளாக விளங்கும். மனம் புத்தி சித்தம் முக்குணங்கள் முதலியன காண்க. மாயையின் செயற்பாடாக விளங்கும் உலகு உடல் முதலியன தோன்றியழியினும் அவற்றிக்குக் காரணமாக விளங்கும் அம்மாயை அழியாது என்பார் 'நித்தமாய்' என்றார். கன்மாந்தம் –வினைநீங்கு மளவும். அணுக்கள்-உயிர்கள். ஈண்டுசகலரைக்குறித்தது. ஆவாரமாய்-மயக்கம் செய்வதாய். உடல் உலகு முதலிய நில்லாத பொருள்களை நிலையென்று உணரச் செய்வதே மயக்கமாம்.

23. என்னைஇது எனில் உலகுக்கு உபாதானம் இல்லை
 இறைவன் அலது எனில்அசித்துச் சித்தினிடத்து உதியாது
மன்னிஉளதேல் முதல்வன் என்கொல் என்னின்
 மாயைதான் அசித்து உருவாய் மருவ மாட்டாது
அன்னவனும் இதுஒழிய ஆக்க மாட்டான்
 அசத்தனும் எனில் அதுவும் அவன் போல் நித்தம்
முன்னவன் அவ் அசித்தை விரித்து எவையும் ஆக்கும்
 முதன்மைஅது கொடுத்தது என மொழிந்திடாரே.

(தெ-ரை) மாயை என்னும் ஒருபொருள் உடல் உலகு முதலிய பொருள்களுக்குக் காரணம் என்பது என்னை எனில், அது இவ்வுலகம் தோன்றுதற்குக் காரணமாக இருக்கும் என்ற அளவிலேயாம். உலகத் தோற்றத்திற்கு இறைவனையன்றி வேறொரு முதற்பொருள் வேண்டு வதில்லையெனில் அறிவற்றதாய உலகம் அறிவுடைய இறைவனி னின்றும் தோன்றாதாம். ஆதலின் மாயை என்ற ஒன்று வேண்டப் படுவதாம்; அற்றேல் உலகிற்குக் காரணம் மாயையே அமையும் இறைவன் வேண்டப்படுவதில்லையே எனில், மாயை அறிவற்ற தாதலின் உடல் உலகு முதலியனவாக்ச் செயற்படுதற்கு உரிய ஆற்றல் அதன்பால் இல்லையாம்; ஆதலின் இவைன் வேண்டப்படுவன். அளவில் ஆற்றலுடைய இறைவனும் மாயையின்றி உடல் உலகு முதலியவைகளைச் செயல்படுத்தான்எனில் அவன் அவ்வகையில் ஆற்றலின்மை உடையன் எனக் கருதப்படுவனே எனில் அற்றன்று; மாயையும் இறைவனைப் போன்றே அழிவில் பொருளாம். ஆயினும் அது அறிவற்றதாம்; ஆதலின் அறிவுடைய முதல்வன் அவ்வறிவற்ற

பொருளிலிருந்து உடல் உலகு முதலியவற்றை உண்டாக்குவன்: அதுபற்றி மாயை முதன்மை பெறுதற்கு அல்லை. அதனை இடனாகக் கொண்டு செயற்படுத்தும் இறைவனே முதன்மையாவான் என்பதாம்.

உடல் உலகு முதலிய செயற்பாடாக விளங்குவது மாயை என முன்னர்க் கூறவே ஏகான்ம வாதியோர் அதனை இடனாகக்கொண்டு சில வினாக்களை எழுப்பினர். அவற்றிற்கு விடையாக அமைந்ததே இப் பாடலாகும். உலகத் தோற்றத்திற்கு இறைவனே அமையும். மாயை என்பது வேண்டுவதின்று என்பது அவர்தம் முதல் தடையாம். இறைவன் அறிவுடைய பொருள். உலகு அறிவற்ற பொருள். ஆதலின் அறிவுடைய பொருளிலிருந்து அறிவற்ற பொருள் தோன்றாது. எனவே அறிவற்ற பொருள் தோன்ற அறிவற்ற பிறிதொரு பொருளே வேண்டும் என்பது ஆசிரியர் கூறும் விடையாகும். அவ்வாறு மாயை முதற்காரணமாயின் இறைவன் வேண்டுவதில்லையே என்பது அவர்கூறிய இரண்டாவது தடையாகும். மாயை அறிவற்றது என முன்னரும் கூறப்பட்டது ஆதலின் அதன் செயற்பாட்டிற்கு விளங்கிய அறிவினனாய இறைவனது முதன்மை வேண்டும் என்பது ஆசிரியரின்விடையாகும். முதல்வன் மாயையையின்றிச்செய்யானாயின் அவ்வகையில் அவன் ஆற்றல் குறைபாடு உடையன் ஆகானோ என்பது அவர் எழுப்பிய மூன்றுவது தடையாகும். குடம் தோன்றுதற்கு மண் முதற்காரணம் ஆதல்பற்றி அதனைக் கொண்டு குடம் செய்யும் குயவன் ஆற்றற் குறைபாடுடையன் அல்லன். அதைப் போன்றே உலகத்தோற்றத்திற்குமாயை முதற்காரணமாய்இருத்தல் பற்றி இறைவன் ஆற்றல் குறைபாடுடையவன் ஆகான் என்பதாம் என்னைஇது-உலகிற்கு முதற்காரணம் மாயை என்றல் எவ்வாறு. உபாதானம்-முதற்காரணம். அசித்து - அறிவற்றது.

24. படைத்ததுஒரு படிஇன்றிப் பறவை பசு நரராய்ப்
பண்ணியதுஎன் முன்னைவினைப் பான்மை என்பர்.
அடுத்தவினை ஊதாயின் இறைஏன் என்னில்
அசேதனம்மற்று அவை ஆவிக்கு அமைத்த தாகும்
எடுத்தவினை உருஉறுவது உயிரேல் தானே
இருவினைக்குத் தக்கஉடல் எய்தும்என்னில்
சடத்திரளும் கர்த்தாவாய் அறிவொன் றில்லாத்
தன்மையனும் கூடஒரு சங்கை இன்றே.

(தெ-ரை) இறைவனே இவ்வுலகைப் படைப்பாராயின் ஒரு தன்மையாகப் படையாமல் பறவை, பசு, மனிதராகப் படைத்த காரணம் என்னை எனக் கேட்பின், உயிர்கள் முற்பிறவிகளிலே தாம் செய்த வினைப்பயனே காரணம் ஆகும் என்பர். அற்றேல் உயிர்களை அடுத்து நிற்கும் அவ்வினையே அமையும்: இறைவன் எற்றுக்கு எனக் கேட்பின், அவ்வினை அறிவில்பொருளாம் : ஆதலின் பறவை பசு முதலிய படைப்புக்களை உயிர்கள் செய்த வினைக்கேற்ப அமைத்தது இறைவனே யாவன். வினை அறிவற்றதாயினும் உயிர் அறிவுடைய தாதலின் அதுவே தான் செய்த வினைக்கேற்ற உடலை எடுத்துக் கொள்ள இயலும்; இறைவன் வேண்டாம் எனில், அறிவற்றதாகிய மாயை, வினைகளும், சார்ந்ததன் வண்ணமாதலின்றித் தனக்கென ஒருசெயலும் அறிவுமில்லாத உயிரும் இயைதற்கு வேறோர் காரணம் இல்லையாம்.

எனவே உயிர்செய்த வினைப் பயன்களுக் கேற்ப உணர்வையும் நுகர்வையும் தந்து உய்யக் கொள்ளுதற்கு இறைவன் வேண்டப் படுவன் என்பது விளங்கும். ஒருபடியின்றி - ஒருதன்மைத்தார் இல்லாமல். நரர் - மனிதர். அசேதனம் - அறிவற்றது. சங்கை- காரணம். உலோகாயதர், நிரீச்சுர சாங்கியர் ஆகிய இருவரின் கொள்கைகளும் இப்பாடற்கண் எடுத்து மறுக்கப்பட்டுள்ளன. உலகைத் தொழிற்படுத்துபவன் இறைவனே எனில் உயிரினங்கள் பலவும் பலவாறாகப் படைக்கப்பட்டிருப்பதேன் என்பது உலோகாயதரின் வினவாதம் அவ்வவ்வுயிர்களும் செய்த வினைகளே அதற்கு காரணமாகும் என்பது அதற்கு ஆசிரியர் தரும் விடையாகும். பல்வேறு வகையான பிறப்பிற்குக் காரணம் வினையேயாயின் கடவுள் எற்றுக்கு என்பது நிரீச்சுரசாங்கியரின் வினவாகும். வினை அறிவில் லாதது, ஆதலின் அவரவர் செய்த வினைகளை அவரவர்க்கும் கூட்டு விக்க இறைவன் வேண்டும் என்பது ஆசிரியர் தரும் விடையாகும். வினைக்கேற்ற உடலை அடைவது உயிராயின் அவ்வுயிரே அமையும். இறைவன் எற்றுக்கு என்பது மீண்டும் அவர் கேட்கும் வினவாகும். உயிர் சார்ந்ததன் வண்ணமாகவும், உணர்த்த உணர்வதாகவும் இருப்பதன்றி எதனையும் முழுமையாகவும் தெளிவாகவும் அறியும் அறிவு அற்றதாகலான் அதற்கு இறைவனின் அருந்துணை வேண்டும் என்பது ஆசிரியர் தரும் விடையாகும்.

25. அல்லல்மிக உயிர்க்குஇவைதான் அணைத்தது ஈசன்
அருவினைகள் அருந்துதற்கோ? வினையோ அன்றிச்

சொல்லிவரும் மாயையோ அணுவை முந்தச்
சூழ்ந்ததுஎனும் உரை, முதலோர் தொடக்குஇலார்பால்
ஒல்லைவ நம் எனின்உளதாம், உயிர்உண் டாவே
உளதுமலம்; மலம்உளதா ஒழிந்த எல்லாம்,
நெல்லின்முளை தவிடு உமிபோல் அநாதி யாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்து மாறே.

(தெ-ரை) உயிர்களுக்குத் துன்பம் மிகுமாறு இவ்வுடல்களை இறைவன் கூட்டியது அவை செய்த வினைப்பயன்களை நுகர்தற்காகவோ? ஆம் என்பீராயின் வினையோ அல்லது நீங்கள் சொல்லி வருகின்ற மாயையோ இவற்றுள் எது உயிரை முன் சூழ்ந்தது என்று கூறுவீராக எனும் வினா, உயிர்கள் காலப் பழைமை கூறுதற்கு இயலாத காலத்து ஒரு மலப் பிணிப்பும் இன்றி இடையில் அம்மலப் பிணிப்பைப் பொருந்தியிருக்குமாயின் நீர் கேட்கும் வினா எடுத்துக் கொள்ளுதற்குரியதாகும். அவ்வாறின்றி உயிர் என்றோ அன்றே ஆணவ மலம் அதனொடு பொருந்தியிருக்க. அது பொருந்தவே ஏனைய வினை மாயைகளும் அன்றே பொருந்தி உளவாம். நெல்லினிடத்து முளை, உமி, தவிடு ஆகிய மூன்றும் அது தோற்றிய நாளிலேயே உளவாதல் போல உயிரிடத்தும் மும்மலயங்களும் காலப் பழைமைக்கு எட்டாத காலத்திலேயே பொருந்தியுளவாம். இது சைவ நூல்களின் கருத்தாம்.

என்று நீ அன்று நான் என்பது போல உயிர் என்றோ அன்றே இம் மும்மலங்களும் அவ்வுயிர்களைத் தகைத்து நிற்பன என்பது கருத்து. முளை கன்மத்துக்கும், தவிடு மாயைக்கும், உமி ஆணவத்திற்கும், அரிசி உயிர்க்கும் உவமையாம். மலம் உளதவா ஒழிந்த எல்லாம்(உளவாம்) என இயைக்க.

மாயேயம்

26. அருத்திமிகும் கலைகாலம் நியதியுடன் வித்தை
அராகம் இவை அனந்தரால் மாயைதனில் ஆகும்
உருத்திரரால் கலைஅதனில் பிரகிருதி குணங்கள்
உளவாகும் அகங்காரம் புந்திதனில் உதிக்கும்
தெரிந்தஇது திரிவிதம்ஆம் தைசதவை காரி
திகழ்தரு பூதாதிஎனத் திருந்தியசாத் துவிகம்
விரிந்தகுணம் மனம்புத்தி இந்திரியம் என்று
விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே.

(தெ-ரை) அசுத்த மாயையினிடத்தில் அநந்த தேவரின் செயலால் உயிர்கட்கு நுகர்பொருளில் விருப்பத்தை மிகுதியாக உண்டாக்கும் கலை காலம் நியதியும், அக்கலையிலிருந்து வித்தை அராகம் ஆகிய இவை ஐந்தும் தோன்றும்; [சிகண்டருத்திரரின் செயலால் முற்கூறப்பெற்ற கலையினின்றும் மூலப் பிரகிருதியும் அதனின்றும் குணதத்துவமும் தோன்றும். அக் குண தத்துவத்தில் தோன்றிய புத்தி தத்துவத்தினின்றும் அகங்காரம் தோன்றும் இவ்வாறு கூறப்பட்ட இவ்வகங்காரம் விளக்கத்தையுடைய தைசத அகங்காரமும் வைகாரி அகங்காரமும் பூதாதி அகங்காரமும் என மூவகைப்படும். இவற்றுள்முற்கூறப்பட்ட தைசத அகங்காரத்திலிருந்து சிறந்த சாத்துவிக குணத்தொடர்பான மனமும், அறிபொறி ஐந்தும் தோன்றும்.

உயிரது மல இருளைச் சிறிது நீக்கி நுகர்பொருளை அறியும் அறிவைக் கொடுத்து அந்நுகர்பொருளை நுகரும் காலத்தை வரையறை செய்து அவற்றில் விருப்பை உண்டாக்குவித்து நுகருமாறு கலை முதலிய தத்துவங்கள் செய்தலின் 'அருத்திமிகும்' என்றார் தைசதம் - சாத்துவிகக் குணத் தொடர்புடையது. வைகாரியம் - இராசதகுண தொடர்புடையது. பூதாதி - தாமத குணத் தொடர் புடையது. அனந்ததேவர் - ஈசுவர தத்துவத்திலிருக்கும் வித்தியேசுரர் எண்மரில் ஒருவர். ஏனைய வித்தியேசுரருக்கும் சுத்த வித்தியா தத்துவத்திலிருக்கும் மற்றையவர்களுக்கும் தலைவர் ஆவர். மாயையை கலக்கி மாயா தத்துவ புவனங்களை உண்டாக்குவர். பரமசிவனுக்கு வேருய் இருப்பவர். பக்குவம் வந்த காலத்தில் இறையருளால் முத்திப்பேற்றை அடைவர். சீகண்டருத்திரர்: பிரளயாகலருள் மலபரிபாகம் பெற்றவர். இறைவனின் அருளைப் பெற்றவர். நூற்றுப் பதினெட்டு உருத்திரர்களில் ஒருவர். சகலருள் சிறந்தாரை மால் அயன் ஆகியோர் தம் பதவிகளில் இருத்துவர். சட்சு - கண் தொக்கு - உடல். சிங்குவை - நாக்கு. சோத்திரம் - காது. ஆக்கிராணம் - மூக்கு.

இதுவுமது

27. மன்னியகன் மேந்திரியம்ஆன இராசதம்சேர்
வாக்குஆதி வைகாரி மருவிவரும் சத்தம்
தன்னைமுத லாகியதா மதமிகும்மாத் திரைபின்
தரும்; அதனில் வான்அ நிலம் அனல் புனல் மண் சத்தம்

முன்; அதனில் வெளியாதி ஒன்று, ஒன்று ஆகும்
முறையில்உறும்; இருமைஅயன் முடிவாம் முன்னே
உன்னுசதா சிவர்ஆதி அதிபதிகள் ஒடுக்கம்
உதித்த அடைவு எனவுரைப்பர் உணர்ந்துளோரே.

(தெ-ரை) நிலைபெற்ற தொழிற் பொறிகளான இராசத குணத் தொடர்புடைய சொல் முதலிய ஐந்தும் வைகாரி அகங்காரத்தில் பொருந்தித் தோன்றும். ஒலியை முதலாகவுடைய தாமத குணம் நிறைந்த தன் மாத்திரைகள் ஐந்தையும் பின்னையதாகிய பூதாதி அகங்காரம் தரும். அந்த ஒலி முதலிய தன் மாத்திரையில் வெளி வளி நெருப்பு நீர் நிலம் என்னும் ஐந்து பூதங்களும் முறையே தோன்றும். அவ்வெளி முதலிய பூதங்கள் ஒலி முதலிய குணங்களில் ஒவ்வொரு குணங்களை ஏற்றமாக முறைப்படி பொருந்தும். நான்முகன் ஈறாக உள்ள ஐம்மூர்த்திகளுக்கும் முதன்மையாக எண்ணப் படும் சதாசிவம் முதலியோர் அப்பூதங்களுக்குக் கடவுளராவர். இத் தத்துவங்கள் தோன்றிய முறையே ஒடுங்கும் என்பர் அறிஞர்.

கன்மேந்திரியம் - தொழிற் கருவிகள்; அவை சொல், கால், கை எருவாய், கருவாய் எனபனவாம். சத்தந்தன்னை முதலாகிய தன் மாத்திரைகள்- ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்பனவாம். காரண தன் மாத்திரை என்றும், விடய தன் மாத்திரை என்றும் இது இருவகைப்படும். மேற்கூறிய ஒலி முதலிய ஐந்தும் தத்தம் குணநலன்களைக் காட்டாது நுண்ணிதாய் இருக்கும் நிலையில் காரண தன்மாத்திரை எனப்படும். தத்தம் குண நலங்கள் தோன்ற ஐவகைப் பூதங்களும் பிறத்தற்குக் காரணமாம் நிலையில் விடய தன்மாத்திரை எனப்படும். ஒலியிலிருந்து வெளியும், ஊற்றிலிருந்து காற்றும் ஒளியிலிருந்து நெருப்பும், சுவையிலிருந்தும் நீரும், நாற்றத்திலிருந்து நிலமும் தோன்றும் என்ப. இவற்றுள் வெளியானது ஒலி என்னும் ஒரு குணத்தை உடையது. காற்று, ஒலி ஊறு ஆகிய இரு குணங்களை உடையது. நெருப்பு, ஒலி ஊறு.ஒளி அகிய முக்குணங்களை உடையது நீர்,ஒலி ஊறு ஒளி சுவை ஆகிய நான்கு குணங்களை உடையது. நிலம்,ஒலி முதல் நாற்றம் ஈறாக உள்ள ஐங்குணங்களையும் உடையது வெளிக்குச் சதாசிவமும், காற்றிற்கு மகேசுரனும், நெருப்பிற்கு உருத்திரனும், நீருக்கு மாலும், நிலத்திற்கு அயனும் கடவுளர் களாம்.

# நூல்நிறை

## அந்தாதி ஐந்து

[ஆசிரியர் திரு: சுத்தசத்வானந்தா (என். எஸ். சிதம்பரம்) பக்கம் 96. விலை ரூ.6. கிடைக்குமிடம்: சுத்தசத்வானந்தா, 14 சிங்காரி நாயக்கன் தெரு, மயிலாப்பூர், சென்னை 600 004.]

கலைமாமணி திரு. சுத்தசத்வானந்தா அவர்கள் இயற்றிய ஸ்ரீகற்ப காம்பாள் அந்தாதி, ஸ்ரீஜயசுப்பிரமணிய சுவாமி அந்தாதி, ஸ்ரீ திருமகள் அந்தாதி, ஸ்ரீ மாருதி அந்தாதி, ஸ்ரீ அருட்குரு அந்தாதி (ஸ்ரீ காஞ்சி ஆசார்ய சுவாமிகள் அவர்கள் பேரில் அமைந்தது) ஆகிய ஐந்து அந்தாதிகளும் சில கீர்த்தனங்களும் இந்நூலில் உள்ளன.

பக்தி இலக்கியங்களில் எளிமை மெருகூசி மரபு கெடாமற் புதுமை செய்யும் அற்புதக் கவிச்சித்தரின் வெற்றி இலக்கியங்கள் இவை. பக்திப்பரவச மூட்டுகிறது.

## ஸ்ரீ சங்கர ஜயந்திமலர்

[பதிப்பாசிரியர்: ஆங்கீரஸ எஸ். வெங்கடேசசர்மா (சங்கரன் அடிமை) பக்கம் 14+131+80 விலை ரூ. 6. கிடைக்குமிடம்: ஸ்ரீ சங்கர பக்த ஜனசபா, 5 டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு, மேலமாம்பலம், சென்னை 600 033.]

திரு. வெங்கடேசசர்மா அவர்களின் மலர்களுக்கு ஒரு தனித் தன்மை உண்டு. சமஸ்கிருதத்தில் உள்ள சிற்றிலக்கியங்கள், துதிப் பகுதிகள் ஆகியவற்றை மூலத்துடன் எளிய இனிய தமிழ் உரையுடன் அவர்தம் மலர்களில் காணலாம். அவ்வகையில் இந்நூலில் ஸ்ரீ சுப்பிரம்மண்ய புஜங்கம், சைவார்யசதகம் முதலியன கருத்தைக் கவர்கின்றன. பயனுள்ள கட்டுரைகள் வரலாறுகள் ஆகியன இனிக்கின்றன.

பக்தர்களின் இல்லங்களில் அவசியம் இருக்கவேண்டிய இனிய வெளியிடாகும் இது

## தேவார அருள் முறைத்திரட்டு

### மூலமும் உரையும்

*[உரையாசிரியர் : திரு. கா. ம. கண்ணப்பன் பி. லிட்., பக்கங்கள் 14+144 விலை ரூ. 7. வெளியீடும், கிடைக்குமிடமும் : அன்னபூர்ணு பதிப்பகம், 7. சன்னதித் தெரு, திருப்பனந்தாள்-612 504.]*

ஸ்ரீ உமாபதி சிவாசாரியார் தாம் இயற்றிய திருவருட்பயன் என்னும் சைவ சமய சாஸ்திர நூலில் காணும் பத்து அதிகாரங் கட்கும் உதாரணமாகவே அமைந்த 99 தேவாரப் பாடல்களைத் திரட்டித் தேவார அருள்முறைத் திரட்டு என நல்கியருளினுர்கள். இத்தொகுப்புத் திருமுறைகளில் பொதிந்து கிடக்கும் சித்தாந்தக் கருத்துக்களை உலகுக்குக் காட்டுவதாகும்.

அத்திருமுறைப் பாடல்களுக்கு எளிய இனிய, யாவரும் உணரக் கூடிய உரையும், அவற்றில் பொதிந்த சாஸ்திரக் கருத்துக்களின் அரிய விளக்கமும் புலவர் திரு. கண்ணப்பன் எழுதி யுள்ளார். திரட்டு அட்டவணை, பதிக, பதிகளின் அட்டவணைகள் ஆகியனவும் நூலுக்கு அணிசெய்கின்றன.

தருமையாதினம் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள் நூலுக்கு அணிந்துரையளித்து உரையை அங்கீகரித்தருளி யுள்ளார்கள்.

பெங்களூர் ம. வே. ஜெயராமன் அவர்கள் இந்நற்பணிக்கும் பொருளுதவி செய்துள்ளார்கள்.

எளிய முறையில் சாஸ்திர அறிவும் திருமுறைதெளிவும், பெறவும், பக்திவழியிற் செல்லவும் இந்நூல் பயன்படும்.



## "Peeps into the Cultural Heritage of Hinduism"

By Thiru M. ARUNACHALAM, M. A.,

Published on the occasion of the world Hindu Conference that took place at Sri Lanka in April 1982.

Price Rs 25/- per copy, postage extra.

*"The book is an admirably lucid and scholarly presentation of our precious heritage and will be of immense value to students and sadhakas".*

| | |
|---|---|
| *Copies can be had from:-*<br>*Manger,*<br>*Sri Kasi Mutt,*<br>*Tirupanandal.* | *Prof:* K. SWAMINATHAN,<br>*Vice-President,*<br>*Ramana Kendra,*<br>*New Delhi.* |

---



## திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

தஞ்சைத் தரணியில் குடந்தைக்கு அண்மையில் உள்ள திருநாகேச்சரம் பாடல் பெற்ற திருத்தலமாகும். இது சேக்கிழார் திருவடி ஞானம் பெற்றதலம்; இப்பதியில் உள்ள அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில் இராசகோபுரமும், கட்ட கோபுரமும் தெய்விக சிந்தனையுடைய அன்பர்களின் கூட்டுணர்வின் வழியாக அரசு மானியத்துடன் திருப்பணி செய்யப் பெற்று வருகின்றன. விரைவில் குடமுழுக்கு நிகழவிருக்கிறது. ஆத்திக அன்பர்கள் இயன்ற அளவில் காணிக்கையளிப்பார்களாக!

அனுப்ப வேண்டிய முகவரி:-

செயல் அலுவலர்,
ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்சரம்

# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

### துந்துபி ஞ ஆனிமீ (1982 ஜூன் — ஜூலை)

### திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்த் | ஆங்கிலத் | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (15—6—82) | செவ்வாய் | அஷ்டமி 11-30 | பூரட்டாதி 6-14 |
| 2 | (16—6—82) | புதன் | நவமி 10-43 | உத்திரட்டாதி 6-20 |
| 3 | (17—6—82) | வியாழன் | தசமி 9-10 | ரேவதி 5-41 அசுவனி 28-18 |
| 4 | (18—6—82) | வெள்ளி | ஏகாதசி 6-55 துவாதசி 28-03 | பரணி 26-19 |
| 5 | (19—6—82) | சனி | திரயோதசி 24-45 | ※கார்த்திகை 23-51 |
| 6 | (20—6—82) | ஞாயிறு | சதுர்த்தசி 21-08 | ரோகிணி 21-04 |
| 7 | (21—6—82) | திங்கள் | அமாவாசை 17-22 | மிருகசிரிடம் 18-09 |
| 8 | (22—6—82) | செவ்வாய் | பிரதமை 13-37 | திருஆதிரை 15-14 |
| 9 | (23—6—82) | புதன் | துதியை 10-02 | புனர்பூசம் 12-31 |
| 10 | (24—6—82) | வியாழன் | திரிதியை 6-48 சதுர்த்தி 28-01 | பூசம் 10-09 |
| 11 | (25—6—82) | வெள்ளி | பஞ்சமி 25-50 | ஆயில்யம் 8-17 |
| 12 | (26—6—82) | சனி | சஷ்டி 24-20 | மகம் 7-01 |
| 13 | (27—6—82) | ஞாயிறு | சப்தமி 23-33 | பூரம் 6-27 |
| 14 | (28—6—82) | திங்கள் | அஷ்டமி 23-31 | உத்திரம் 6-37 |
| 15 | (29—6—82) | செவ்வாய் | நவமி 24-11 | அஸ்தம் 7-30 |
| 16 | (30—6—82) | புதன் | தசமி 25-29 | சித்திரை 9-03 |
| 17 | (1—7—82) | வியாழன் | ஏகாதசி 27-18 | சுவாதி 11-11 |
| 18 | (2—7—82) | வெள்ளி | துவாதசிநாள்முழுவதும் | விசாகம் 13-46 |
| 19 | (3—7—82) | சனி | ,, 5-30 | அனுஷம் 16-40 |
| 20 | (4—7—82) | ஞாயிறு | திரயோதசி 7-57 | கேட்டை 19-45 |
| 21 | (5—7—82) | திங்கள் | சதுர்த்தசி 10-30 | மூலம் 22-52 |
| 22 | (6—7—82) | செவ்வாய் | Oபௌர்ணமி 13-02 | பூராடம் 25-55 |
| 23 | (7—7—82) | புதன் | பிரதமை 15-26 | உத்திராடம் 28-48 |
| 24 | (8—7—82) | வியாழன் | துதியை 17-35 | திருஓணம்நாள்முழுதும் |
| 25 | (9—7—82) | வெள்ளி | திரிதியை 19-25 | ,, 7-24 |
| 26 | (10—7—82) | சனி | சதுர்த்தி 20-49 | அவிட்டம் 9-37 |
| 27 | (11—7—82) | ஞாயிறு | பஞ்சமி 21-42 | சதயம் 11-23 |
| 28 | (12—7—82) | திங்கள் | சஷ்டி 22-00 | பூராட்டாதி 12-37 |
| 29 | (13—7—82) | செவ்வாய் | சப்தமி 21-41 | உத்திரட்டாதி 13-14 |
| 30 | (14—7—82) | புதன் | அஷ்டமி 20-43 | ரேவதி 13-13 |
| 31 | (15—7—82) | வியாழன் | நவமி 19-06 | அசுவனி 12-34 |
| 32 | (16—7—82) | வெள்ளி | தசமி 16-54 | பரணி 11-19 |

கடகத்திற்கு சூரியன் 17-05க்கு போகிறார்.

## 62. ஒரு நல்ல மனிதனின் பொக்கிஷம்

தமிழாக்கம்:- கோ. வன்மீகநாதன்.

டௌ உலகின் விளங்காத இரகசியம்
நல்ல மனிதனின் பொக்கிஷம்
கெட்ட மனிதனின் புகலிடம்
அழகிய பொன்மொழிகளைச் சந்தையில் விற்கலாம்
தலை சிறந்த நல்லொழுக்கத்தை ஒரு பரிசாக அளிக்கலாம்
கெட்ட மனிதர்கள் இருக்கிறார்களே ஆயினும்
அவர்களை நிராகரிப்பானேன்?

ஆகையால் ஒரு சக்ரவர்த்தி முடி சூட்டும் போதோ
(தலைமையாய) மூன்று மந்திரிகளை நியமிக்கும் போதோ
விலை உயர்ந்த நவரத்தினங்களையும் நான்கு குதிரைகள்
கொண்ட அணிகளைக் கப்பமாக அனுப்புவதை விட
டௌவைக் காப்பமாக அனுப்பவும்.

எந்தக் காரணத்திற்காக நம் மூதாதையோர் டௌவைப் போற்றிப்
பேணினார்கள்?
அவர்கள் சொன்னதைக் கேட்டதில்லையா, 'குற்றவாளிகளைக்
கண்டுபிடித்து அவர்களை மன்னிப்பதற்காக"
என்று.
ஆகையால் டௌ உலகத்தின் பொக்கிஷம்.

## 63. செயற்கரிதும் செயற்கு எளிதும்

யாதும் செய்யாமையைச் சாதி (நிறைவேற்று).
எந்தக் காரியத்தையும் கவனிக்காதே
சுவையற்றதைச் சுவைத்து இன்புறு
பெரிதாகவோ சிறிதாகவோ இருந்தாலும்
பலவாகவோ சிலவாகவோ இருந்தாலும்
பகைமைக்கு நன்னயத்தால் கைமாறு செய்
கடினமான காரியத்தை அது சிறிதாக இருக்கும் போதே
நடத்திவிடு.

உலகத்தில் உள்ள கடுமையான, சிக்கலும் ஆனதுமான
விஷயங்கள் செய்வதற்கு
எளிதாய் இருக்கும் போதே செய்யப்பட வேண்டும்
உலகத்தின் சிக்கலான பெரிய விஷயங்கள் எல்லாம் அவை
சிறியனவாக இருக்கும் போதே கவனிக்கப்
பட்டிருக்கவேண்டும்
ஆகையால் மெய்ஞானியானவன் ஒரு காலத்திலும் பெரிய
பிரச்சனைகளைத் தீர்ப்பதில் ஈடுபடாததால்
பெரிய காரியங்களைச் சாதிக்கின்றான்

எவனொருவன் முன் பின் யோசிக்காமல் எளிதாக வாக்களித்து
விடுக்கின்றானோ
அவன் தன் வாக்கை நிறைவேற்றுவது மிகவும் கடுமையாய்
இருப்பதைப் பஸ்காலம் உணருகிறான்
எவனொருவன் பல விஷயங்களை மிகவும் அசட்டையாகப்
பாவிக்கின்றானோ
அவன் பல இடையூறுகளை எதிர்ப்படுவான்.
இக்காரணத்தினால் மெய்ஞானி கூட காரியங்களைச் செய்வதற்கு
கடினமானவைகளாகக் கருதுகிறான்
அக்காரணம் பற்றியே அவன் இடையூறுகளை எதிர்ப்படுவதில்லை

உரைநடை

## 46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்.

அங்கையற்கண் அம்மையாரின் வினா

முழுமுதற் கடவுளாகிய இறைவர் மறைந்தருளிய பின் பன்றி முகக் குமாரர்கள் பன்னிருவரும் உதய சூரியர்கள் பன்னிருவர்கள் போல் விளங்கிப் பல கலைகளிலும் வல்லவர்களாய் ஒருசேரப் பன்றி மலையில் இருந்தார்கள். அங்ஙனம் அவர்கள் இருக்கும் நாளிலே, சோமசுந்தரக் கடவுளின் திருவருளின் வகைகள் எல்லா உயிர்கட்கும் பொதுவாய் நின்று இன்பம் தருவன என்று ஞான நூல்கள் கூறும் உண்மையை உலகத்தார் அனைவரும் தெளிந்துய்ய அங்கயற்கண் அம்மையார் இறைவனை நோக்கி, 'எம்பெருமானே! கொடிய விலங்குகளெல்லாவற்றினும் மிகக் கொடியதாய் அறிவில்லாதனவாய் உள்ள பன்றிக் குட்டிகளுக்கு இரங்கி நீர் தாய்ப் பன்றியாகி முலை கொடுத்து முன்னை விலங்கின் அறிவைப் போக்கியருளியது என்னை?' என்று வினவினர்.

இறைவர் அம்மையார்க்கு விடையருளல்

அப்போது சோமசுந்தரக் கடவுள் அம்மையாரை நோக்கி, "சகல வேதங்களும் ஆகமங்களும் நம்மைச் [1] சகல சீவதயாபரன் என்று சொல்லுந் தகுதியால், சேதனப் பொருள் (அறிவுப் பொருள்) அசேதனப் பொருள் (அறிவில்லாத பொருள்) என்னும் இரண்டும் எமக்கு வேறல்ல; ஒருதன்மையனவே. அக்காரணத்தாலே தாயை இழந்து கொடிய பசியினால் கானிடைக் கிடந்து பற்றுக்கோடின்றி வருத்தமடைந்த பன்றிக் குட்டிகளுக்கு இரங்கித் தாயாகி முலை கொடுத்து அவற்றைக் காத்தருளினோம். அதனால் அப்பன்றிக்குட்டிகள் அளவில்லாத வலிமையையும் வெற்றியையும் கல்வியின் முதிர்வையும், ஞானத்தையும் பெற்றுக்கொண்டன. இனிமேல் அப் பன்றி முகக் குமாரர்கள் இராசராச பாண்டியனுக்கு மந்திரிகளாக இருந்து பலவகை வளங்களையும் பெருக்கிப் பாசங்களை ஒழித்து நம்முடைய பெருங்கணத்தவர்கள் ஆவார்கள்" என்று விடைகொடுத்தருளினர்.

பாண்டியன் பன்றிமுகக் குமாரர்களை மந்திரியாக்குதல்

பின்பு சோமசுந்தரக் கடவுள் அன்றிரவு இராசராச பாண்டியனின் கனவில் தோன்றி, "அரசனே! பன்றி மலையிலே பன்றி

1. சகல சீவதயாபரன்-எல்லா உயிர்களிடத்தும் ஒரே தன்மையான அருளையுடைய இறைவன் என்னும் பொருளுடையது.

முகமுடைய பன்னிரண்டு குமாரர்கள் இருக்கின்றனர்; அவர்கள் மிகுந்த அறிவினையுடையவர்கள். அவர்களை உனது அவையினுக்கு மந்திரிமார்களாகக் கொள்ளக் கடவை'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர். 1உடனே பாண்டியன் மகிழ்ச்சியுடையவனாய் விழித்தெழுந்து விடியற் காலையிலே மந்திரிகளை அழைத்து அக் கனவினை அறிவித்துப் பன்றி மலையின்மேல் வசிக்கும் பன்றிமுக வீரர்களை அழைத்து வருமாறு கட்டளையிட்டான். அமைச்சர்கள் பன்றி மலையினை அடைந்து அவர்களைக் கண்டு பாண்டியன் விருப்பத்தைக் கூறி வருமாறு வேண்ட, அப்பன்றிமுக வீரர்களும் பாண்டியன் திருமுன்பு வந்து வணங்கினர். பாண்டியன் எதிர்கண்டு அளவில்லாத மகிழ்ச்சியுற்று அவர்களுக்கு அமைச்சியல் உரிமையை அளித்துப் பல்வேறு வரிசைகளையும் தக்கவாறு கொடுத்துப் பழைய அமைச்சர்களின் பெண்களை அவர்களுக்கு மறைநூல் விதிப்படி திருமணமும் செய்வித்தான்.

பன்றிமுக வீரர்களின் நன்மை

பன்றிமுக வீரர்கள் பன்னிருவரும் பாண்டியனுக்குக் கவசமும் கண்ணும்போல ஒழுகினர்கள்; பன்னிரண்டு உடம்புக்கும் உயிர் ஒன்றே என்று அனைவரும் சொல்லும் வண்ணம் ஒற்றுமையுடைவர்களாய் வாழ்ந்து வந்தனர். ஐந்து வாய்களையுடைய பாம்பானது விழுங்கும் இறைபோன்று திடங்கொண்ட உள்ளத்தோடு கருமத்தை ஏற்று நடாத்துவர்; பாண்டியனது கல்விப் பொருளும் செல்வப் பொருளும் அவனுக்குப் பயன் அளித்தல் போலப் பயன் நல்கி மகிழ்ச்சியொடு தொழில் புரிவர்; நல்ல பசுவின் பாலில் நறுந்தேன் கலந்தாற் போலக் கல்வியறிவோடு நுண்ணறிவும் பெற்று இருந்தனர்; சோர்வில்லாத மொழிகளாலே பகைவர்களின் மனமும் களிப்படையுமாறு பேசிவந்தனர்; பிறருடைய சொற்களிலுள்ள

---

1. இங்கே, "கருமுகிற்(கு) அணிநிறத் தழல்கட் பிறையெயிற்(று) அரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச், செங்கோல் முளையிட்(டு) அநன்நீர் தேக்கிக், கொலைகள(வு) என்னும் படர் களை கட்டுத், திக்குப் படராணை வேலிகோலித், தருமப் பெரும்பயிர் உலகுபெற விளைக்கும், நாற்படை வன்னிய ராக்கிய பெருமான்'' என வரும் கல்லாட அடிகள் உன்னற் பாலன;

குற்றத்தை விடுத்து அவற்றின் பயனை மட்டும் ஆராய்ந்துகொள்ளும் வல்லமையுடையவராயிருந்தனர்; 'நாம் பழமையுடையோம்; அரசனால் மதிக்கப்பட்டோம்' என்று களிப்படையாமல், அருகில் நின்று ஏவியவற்றைச் செய்யும் சிறுவர்களைப்போல ஒருசிறை ஒதுங்கி நடந்தனர்; அரசனால் விரும்பப்பட்ட பொருள் எதுவோ அதனைச் சிறிதும்தாம் விரும்பாது, விடம்போல வெறுக்கும் இயல்பினர்: அரசனை அனல்போலக் கருதி அணுகாமலும் நீங்காமலும், தீக்காய் வார்போல நடந்துவந்தனர்.

நல்லாவின் பாலின் நறுந்தேன்கலந் தென்னப் பன்னூல்
வல்லாரு மாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லால் அடையார் மனமுங்களி தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயனாய்ந்து கவர வல்லார்.

பழையேம் இறையுட் கொளப்பட்டமென் றேமாப்(பு)எய்தார்
உழையேவல் செய்யுஞ் சிறார்போல ஒதுங்கி வேந்தன்
விழைவே(து) அதனை விடம்போல வெறுத்து வெஃகார்
அழல்போல் அணுகார் அகலார்நிழல் அன்னநீரார்.

பன்றிமுக வீரர்களின் ஆட்சித் திறமை

அரசனது உடல் நிழல்போன்று விடாது நிற்கும் அமச்சராகிய பன்றிமுக வீரர்கள் தங்கள் ஆட்சியில், குடி மக்கள் தாம் [1]மறுக்கப்பட்ட செயல்களை விலக்கி நல்வழியில் நடத்தலால் அவர்களைத் தண்டித்து வாங்கும் பொருளும், பகைவர்கள் தாம் ஏவிய ஏவலைக் கேட்டு ஒழுகியதால் அவர்களை வென்று பெறும் பொருளும் இல்லையாயிற்று. குடிமக்கள் விளை பொருளில் ஆறிலொரு கடமை இறுக்கும் இறைப்பொருள் ஒன்றே அவர்கள் பாண்டியனுக்கு ஈட்டும் செல்வமாகும்.[2] பாண்டியன் மனத்தில் கொண்ட கொள்கைகள் தங்கள்

---

1. மறுக்கப்பட்ட செயல்கள்-அவை தீக்கொளுத்தல், நஞ்சிடுதல் கருவியால் கொல்லுதல், திருடுதல், வழிப்பறித்தல், சூறையாடுதல் பிறர் மனைவியை விரும்புதல் முதலியனவாம்.

2. இன்னும் உடையாரின்மையின் தாமே வந்துற்ற பொருளும், சுங்கப் பொருளும், திறைப் பொருளும் அரசர்குரிய பொருள்களாம் இதனை, ''உறுபொருளும் உல்கு பொருளுந்தன் ஒன்னார்த், தெறு பொருளும் வேந்தன் பொருள்'' எனவரும் திருக்குறளால் அறியலாம்.

நெஞ்சினுள்ளே கண்ணாடியின் நிழல்போல் விளங்க, அவற்றை நன்றாக ஆய்ந்து அறநெறியிற் பட்டனவாயின் செய்வர்; அறநெறியிற்படாதனவாயின் தங்கள் செல்வத்திற்கும் உயிருக்கும் இறுதிவரினும் அவற்றைச் செய்ய மனத்தினாலும் கருதார்.

பன்றி வீரர்கள் சிவபதம் அடைதல்

இவ்வாறு பன்னிருவரும் ஈகையும், அறமும், புகழும் பாண்டியனுக்கு நாடோறும் பெருகுமாறு எட்டுத் திசைகளிலும் வெற்றி உண்டாகச்செய்து வாழ்ந்திருந்தனர். சிலகாலஞ் சென்றபின் சிவலோகத்தை அடைந்து சிவகணத் தலைவர்களாயினார்கள். இராசராச பாண்டியனும் இந்திர பதவியை அடைந்து வீற்றிருந்தான்.

செய்யுள்—18
ஆகசெய்யுள்—2273

—

## 47. கரிக்குருவிக்கு உபதேசம் செய்த படலம்

கரிக்குருவியின் துன்பம்

இராசராச பாண்டியன் இந்திர பதவியைப் பெற்றபின் அவன் குமாரனாகிய சுகுண பாண்டியன் என்பான் வன்மை மிகுந்த ஆண் சிங்கத்தைப்போல் விளங்கி, உயிர்களின் துன்பத்தைப் போக்கிச் செங்கோல் செலுத்திவரும் நாளிலே, வலிமை மிக்க ஒருவன் முற்பிறவியில் எத்துறையிலும் நல்லறமே புரிந்து, சிறிது பாவமும் செய்தமையால் இப்பிறவியில் கரிக்குருவியாய் வந்து பிறந்தான். அக்கரிக்குருவியினுக்குக் காகம் முதலான பறவைகள் கூற்றுவனைப்போல் இடையூற்றினை விளைத்து வந்தன. அதனால் அது குருதி வடிகின்ற தலையினையுடையதாகிப் பறவைகளனைத்திற்கும் எளிய பறவையாய் அவ்விடையூற்றினுக்கு அஞ்சி நகரத்துள் இருந்து, பின் அங்கிருத்தற்கும் பயந்து பெரிய காட்டினுட்சென்று, வழி அருகின் ஒரு புறத்தில் நிற்கும் பூத்துத் தழைத்த ஒரு மரத்தின் மேல் மிகுந்த நாணத்தோடு சேர்ந்து பெருமூச் செறிந்து கொண்டு அமர்ந்திருந்தது.

கரிக்குருவி நல்லுரை கேட்டு மதுரையடைதல்

அப்பொழுது திருநீறும் உருத்திராக்க மாலையும் அணிந்தவரும், உள்ளும் புறமும் தூய்மையுடையவரும், கையிலே குடை பிடித்தவரும், தீர்த்த யாத்திரை செய்துவருபவருமாகிய ஒரு சிவபத்தர்

அம்மரத்தின் நிழலில் வந்திருந்துகொண்டு, அங்குள்ள சிலரை நோக்கி, ''யாவர்க்கும் நற்பயனை நல்கும் தலம் மதுரை; தீர்த்தம் பொற்றாமரை; மூர்த்தி சோமசுந்தரக் கடவுள் என்று பெரியோர்கள் கூறுவர். இங்ஙனம் ஒரேயிடத்தில் மூவகைச் சிறப்பும் நிறைந்த இடம் இந்நிலவுலகில் எங்கும் இல்லை. இம்மூன்றில் ஒன்றே மற்றைப் பகுதிகளில் எஞ்ஞான்றும் சிறந்து விளங்கும். மதுரையிலோ இம் மூன்றும் சிறப்புற்று விளங்கும். அதனால், மதுரைக்கு இணையான தலம் வேறில்லை. சோமசுந்தரக் கடவுள் தன்னை வழிபடும் அடியார்களுக்கு எளியவராகி, அவர்கள் விரும்பிய வரங்களனைத்தையும் இப்பிறவியிலேயே தந்தருளுவர். மற்றைத் தலத்திலுள்ள மூர்த்திகளோ மறு பிறப்பிலன்றி இப்பிறப்பில் நல்கார். ஆதலால் விசேட மூர்த்தி சோமசுந்தரக் கடவுளே ஆவர்'' என்று போதித்தார். அம் மரக்கொம்பில் சாம்பியிருந்த கரிக்குருவி அதைக் கேட்டவுடனே ஞானம் பெற்றது; அதனால் தான் பறவையாய்ப் பிறந்த காரணமும் பிறவும் தெளிந்தது; ''நான் இப்பிறவியை ஒழிப்பதற்கு இச் சிவபத்தர் இங்குச் சொல்லியதே உறுதி'' என்று கருதித் துணிந்து அக் காட்டினின்றும் நீங்கி மதுரைப் பதியை அடைந்தது.

கரிக்குருவி சோமசுந்தரக் கடவுளை வழிபடுதல்

பின்பு, கரிக்குருவி பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிச் சோமசுந்தரக் கடவுளை வலஞ்செய்து அன்புடனே மனத்தினாலே பூசித்து வணங்கியது. இவ்வாறு மூன்று நாட்கள் கழிந்தபின் மீனாட்சியம்மையார் சோமசுந்தரக் கடவுளை நோக்கி, ''ஐயனே! இக் கரிக்குருவி செய்யும் வழிபாடு எதன்பொருட்டு? இதன் வரவு யாது?'' என்று வினவினர். அண்ணலாரும் அக் கரிக்குருவியின் வரலாறு அனைத்தையும் முறைப்படி அம்மையாருக்கு அருளிச் செய்தார்; பிறகு கரிக்குருவியின்மேல் திருவருணோக்கம் வைத்து, முன்னாளிலே மார்க்கண்டேய முனிவருக்கு அழிவற்ற தன்மையைக் கொடுத்துக் கூற்றுவனை மாய்த்த உண்மை ஞானமாகிய மிருத்திஞ்சய மந்திரத்தை உபதேசித்தருளினார்.

கரிக்குருவி இறைவனை வேண்டி வரம் பெறுதல்

சோமசுந்தரக் கடவுள் உபதேசித்தருளிய மிருத்திஞ்சய மந்திரத்தைச் செவியிலேற்றவுடன் பிறவித் துன்பமொழிந்து கரிக்குருவி சிற்றறிவு நீங்கிப் பேரறிவு பெற்றுச் சிவபெருமானின் திருவடிகளை மனத்திற் கொண்டு,

என்னி லாவுயிர்க்(கு) இறைவ போற்றி! வான்
தண்ணி லாமதிச் சடில போற்றி! என்
புண்ணி யப்பயன் போற்றி! அங்கயற்
கண்ணி நாத!நின் கருணை போற்றியால்!

என்று துதித்துக்கொண்டு, ''எம்பெருமானே! அறிவின்றிச் செய்த தீவினையினாலே நின் கருணைத் திறத்தை அறியாது அழியா நிற்கும் அடியேனையும் ஆளல் வேண்டாமோ? எளியவர் எங்குள்ளார் என்று தேடித் தேடி அலைந்து, அவர்மீது அருள்புரிதலே உமது திருவருளின் தன்மையாகும்; அடியேன் முற்பிறப்பிலே செய்த நல்ல அறத்தினை யுடைமையால் இப்பிறப்பிலே இம் மந்திரத்தை அடியேனுக்கு உபதேசித்தருளினீர்; இது மறுமையில் சிவகதி அடைவதற்குக் காரணமாயிற்று. ஆதலால், அடியேன் மும்மையினும் நற்பேறு அடைந்தேனாயினேன்.[1] ஆயினும் ஐயனே! அடியேனுக்கு ஒரு குறை உளது. கொடிய பறவைகளெல்லாம் அடியேனைத் துன்புறுத்தி வருத்துகின்றன. கண்டவரெல்லாம் நகைக்கும்படி எளியனாயினேன்'' என்று விண்ணப்பஞ் செய்தது. அப்போது சோமசுந்தரக் கடவுள், ''அப்பறவைகளுக்கெல்லாம் நீ வலியை(வலியான்) ஆகக் கடவாய்'' என்று திருவாய்மலர்ந்தருளினார். பின்னும், அக் கரிக்குருவி எம் பிரானை வணங்கி, அடியேனுக்கு இன்னும் ஒரு வரந்தரல் வேண்டும்; தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய வலியான் என்பது அடியேன் மரபிலுள்ள பறவைகளுக்கெல்லாம் விளங்க வேண்டும்; எஞ்ஞான்றும் அப் பறவைகள் தேவரீர் உபதேசித்த மந்திரத்தை ஓதியோதி உய்தல் வேண்டும்; அருள் செய்வீராக'' என்று இரந்து வேண்டியது; சோமசுந்தரக் கடவுள், ''அங்ஙனமே ஆகக் கடவது'' என்று கூறியருளி, [2]மூன்றெழுத்தினால் முடிந்த அம்மந்திரத்தைத் தெய்வம், இருடி, சந்தம் என்பவற்றுடன் எடுத்தல், படுத்தல், நலிதல் என்ற மூவகையோசையோடும் தெளிவித்தார்[3]. கரிக்குருவி குருமொழியை

---

1. இங்கே, ''சென்ற காலத்தின் பழுதிலாத் திறனும் இனியெதிர் காலத்தின் சிறப்பும், இன்றெழுந் தருளப் பெற்ற பேறிதனால் என்றைக்குந் திருவருளுடையோம்'' என வரும் பெரிய புராணச் செய்யுட் கருத்து ஒற்றுமையுறுதல் காண்க.

2. மூன்றெழுத்தினால் முடிந்த மந்திரம் - இது திரியம்பகம் என்னும் வேத மந்திரம் ஆகும்.

3. இங்கே, ''கருங்குரு விக்கன் றருளினைபோற்றி'' (திருவாசகம்-போற்றித் திருவகவல்) எனவும், ''இவ்வுலகுயிர் அளித்த, பஞ்சின் மெல்லடிப் பாவை கூறுடைக், கருங்குரு விக்குக் கண்ணருள் கொடுத்த

இடைவிடாது பயின்றது1. தன் சாதிப்பறவைகளும் தன்னைப் போலவே சிவபெருமான் அருளிய வலியால் பறவைகளுக்கெல்லாம் வலியனவாகி வலியான் என்னும் காரணப் பெயரைப் பெற்று உலகிலே சிறப்புற்றிருந்தன. கரிக்குருவி, சிவபெருமானுடைய திருவடியை அடைந்தது.

இறைவனிடத்து அன்புடையார் தன்மை

இக்கரிக்குருவி தான் வருந்தித் தவஞ்செய்து பெற்ற வரத்தினைத் தன்னைப்போல் தன்சுற்றமும் எளிதாக அடையும்படி வேண்டிப் பெற்றது. அதனால், ''உலகத்திலே தக்கான் ஒருவன் வாழத் தன் கிளை வாழும்'' என்னும் பழமொழி விளங்கிற்று.

இறைவனின் திருவடியிடத்து அன்பு கொள்ளாதவர்களைப் போன்ற கொடியவர்கள் இல்லை; இறைவன் திருவடியிடத்து அன்பு கொண்டவர்களைப்போன்ற வலிமை பெற்றவர்களும் இல்லை. இறைவன் திருவடியிடத்து அன்பின்மையால் எளிய பறவையாய்த் திரிந்த கரிக்குருவி, பின் இறைவன் திருவடியிடத்து அன்பு கொண்டதால் எல்லாப் பறவைகளுக்கும் வலிய பறவையாய் விளங்கலாயிற்று.

ஈச னடிக்கன் பில்லார்போல் எளியார் இல்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் புடையார்போல் வலியார் இல்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் பின்மையினல் எளிதாய்த் திரிந்த இக்கயவாய்
ஈச னடிக்கன் புடைமையினல் வலிதாயிற்றே யெவ்வுயிர்க்கும்.

செய்யுள்—23

ஆகச் செய்யுள்—2296

---

வெண்டிரு நீற்றுச் செக்கர் மேனியன்'' (கல்லாடம்) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

1. இங்கே, ''ஆற்றல்வேண்டுநர் எலாம் அரனை அன்பினல், போற்றி இம்மனுப் புகல்கென்னல் போன்றமுன், சாற்றிய மந்திரந் தன்னைக் காக்குரீஇ, வீற்றுவீற் ருவிருந்(து) உரைத்தல் மேயின', என வரும் காஞ்சிப் புராணம் பன்னிருநாமப் படலச் செய்யுள் சிந்திக்கற்பாலது.

# 48. நாரைக்கு முத்தி கொடுத்த படலம்

நாரையின் வாழ்க்கை

வையை நதி சூழ்ந்த பாண்டி நாட்டிலே ஒரு சார் தென் திசையில் மாடங்கள் நிறைந்த பதி ஒன்று உள்ளது. அங்கு, யாழிசை போல இசை பாடும் வண்டுகளுக்குத் தேனினை அளிக்கின்ற தாமரை மலர்கள் நிறைந்த தடாகம் ஒன்று உள்ளது. அத் தடாகத்தில் வாழும் மீன்கள் அனைத்தையும் உண்டு அத்துறையின்கண் சிவந்த கால்களைக் கொண்ட ஒரு நாரை தங்கி வாழ்ந்து வந்தது.

அச்சோ தீர்த்தம்

சிலகாலம் மழையின்மையால் அத் தாமரைத் தடாகம், அதன் கரையின்கண் தங்கிய நாரையின் இருவினைக் கடலும் வறக்குமாறு போல நீர் வற்றிப் போயிற்று. வெள்ளிய சிறைகளையுடைய அந் நாரையும் இரையை விருப்பி அங்குநின்றும் நீங்கி விரைந்து சென்று குற்றமற்ற முனிவர்கள் வாழும் ஒரு காட்டிலே சோர்ந்து விழுந்தது. அக் காட்டினிலே சீவன் முத்தர்களான முனிவர்கள் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் கூட்டத்திலே சிவானந்தக் கடலில் மூழ்கிச் சிவமாந் தன்மை பெற்ற சத்தியன் என்னும் பெயருடைய தவமுனிவர் ஒருவர் தங்கியிருந்தார். அங்கு ஒரு கூப்பிடு தூரம் எல்லை அளவு கொண்ட சதுரமாய்க் கட்டப்பட்டுச் சுற்றிலும் படித்துறையமையப் பெற்றுக்கரையிலே சந்தியாமடம்என்றுஒரு தடாகம் இருந்தது; அதனைச் சூழ்ந்த புறத்தே மணம் வீசும் சண்பகமும், பாதிரியும், வேங்கையும், வஞ்சியும், குராவும், மராவும், முருக்கும், மருதும், பிறவும் நிறைந் திருந்தன. அத் தடாகத்தினை 'அச்சோ தீர்த்தம்'[1] என அழைப்பர்; அத் தடாகத்தின் கரையில் முன்னே இரை விரும்பி வந்த நாரை வந்து தங்கியது.

நாரை கைக்கொண்ட விரதம்

உண்மைப் பொருளை ஆராய்ந்துணர்ந்த முனிவர்கள் அத் தடாகத்திலே மூழ்கி மூழ்கி மேலே எழுந்தோறும் அவர்களின் தோட் புறத்திலே சார்ந்து கிடக்கும் சடைக்கற்றையில் மீன்கள் பாய்ந்து பாய்ந்து புரளுதலை நாரை பார்த்துக்கொண்டிருந்தது. ''இங்கு இம் முனிவர்களின் திருமேனியைத் தீண்டுவதற்கு இம்மீன்கள் எத்துணைத் தவம் செய்தனவோ! இம் மீன்களை நாம் இரையாகக் கொள்ள லாகாது'' என்று கருதி இரையை வெறுத்து அங்கு இருந்தது.

---

1. இஃது, 'அதோ தீர்த்தம்' எனவும் பெயர் பெறும்.

நாரை மதுரை நகரை அடைந்து வழிபடல்

ஒப்பற்ற தவம் புரியும் முனிவர்களனைவரும் அத்தடாகத்தில் நீராடிக் கரையேறி நித்திய கருமம் முடித்துச் சந்தியா மடத்தில் அமர்ந்து, சோமசுந்தரக் கடவுளின் மதுரைப் புராண நூலினை ஓதி வருவாராயினர். அப்புராணத்திலே சொக்கலிங்க மூர்த்தியின் சிறப்பினையும், மதுரைத் தலத்தின் சிறப்பினையும், பொற்றாமரைத் தீர்த்தத்தின் சிறப்பினையும், சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களையும், அம் மூர்த்தி தலம் தீர்த்தங்களை அடைந்தவர்களுக்கு அவர் எளிதில் வந்து அருள் புரிவார் என்னும் தன்மையையும் எடுத்துச் சொல்ல அங்கே தங்கியிருக்கும் நாரை அவற்றைக் கேட்டது. உடனே அந் நாரை அறியாமை நீங்கப் பெற்று வினைத் தொடர்பை அறுத்து, மெய்யுணர்வு பெற்றுச் சிவ பரஞ் சுடரின் திருவடிக்கண் அன்பு "வா வா" என்று இழுக்கப் புறப்பட்டு மதுரைத் திருநகரை அடைந்து; பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடி, எட்டு யானைகளால் சுமக்கப்பட்ட விண்ணிழி விமானத்தின்கண் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை வணங்கி வலம்வர அவ்விறைவன் அருள்பொழியும் திருக்கண்ணால் நோக்க,[1] அவரது அருளுருவைத் தரிசித்து, அவர் திருமுன் இருந்துகொண்டு அவருடைய திருமேனியை மனத்தினுள்ளே தியானஞ் செய்தது.

இறைவன் நாரைக்கு அருள்புரிதல்

இவ்வாறு நாரைக்குப் பதினைந்து நாட்கள் வரை நியமமாக வழிபாடு நடைபெற்றது. பதினாறும் நாள் வழக்கம்போல் நாரை பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடப் புகுந்தபோது பசியினாலே மிக வருந்தி அங்குள்ள ஒளிவிடும் வேலினைப் போலத் துள்ளுகின்ற மீன்களைப் பிடித்து உண்ணும் பொருட்டுச் சிறிது நினைந்தது. பின்பு சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் அறிவு வரப்பெற்று, ஐயையோ இப்புண்ணிய தீர்த்தத்தில் வாழும் மீன்களைப் புசித்தற்கு எனக்கு இப்போது ஆசை உண்டாயிற்றே! இங்ஙனம் ஆனால் இப் பிறவித் துன்பம் எப்பொழுது ஒழியுமோ?" என்று எண்ணிப் பெருந்துயரில் ஆழ்ந்தது; மீண்டும் சோமசுந்தரக் கடவுளின் திருவடியின்மீது கொண்ட அன்பினைத் துணையாகக் கொண்டு, மீன்களை உண்ணாது

---

1. இறைவன் அருட்கண்ணால் நோக்க அதனால் தரிசித்தலை, "கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி, எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி" (திருவாசகம்-சிவபுராணம்) என வரும் அடிகளால் அறியலாம்.

அங்கே தங்கியிருந்தது. அப்போது தேவர்களும் வேதங்களும் செய்யும் வழிபாட்டிற்கும் எட்டாதவராகிய சோமசுந்தரக் கடவுள், அந் நாரை தன் மனத்தில் நினைத்த வடிவமாகத் தோன்றி, ''எமக்கு இனியாய்! உனக்கு வேண்டும் வரம் யாது? சொல்'' என்று திருவாய்மலர்ந்தருளினர்.

நாரை வரம் பெறுதல்

சிவந்த கால்களையுடைய நாரை இறைவன் திருமுன் சென்று வீழ்ந்து வணங்கி ''ஐயனே! இப் பிறவியைப் போக்கி அடியேனை நின் மெய்யன்பர் வாழும் சிவலோகத்திலே சேர்த்துக் கொள்ள வேண்டும். மற்றொன்றும் வேண்டும்; கருணை வள்ளலே! அடியேன் மரபில் உள்ளனவும் மற்றையவுமான பறவைகள் புனிதம் நிறைந்த இத் தீர்த்தத்தில் உள்ள மீன்களைப் புசிக்கின் எக்காலமும் நீங்காத பாவம் வந்து அவற்றைச் சாரும். ஆதலினால், இத் தீர்த்தத்தில் மீன்கள் எக்காலத்தும் இல்லாதொழிதற் பொருட்டும் ஒரு வரம் அருள வேண்டும்'' என்று வேண்டி நின்றது. அப்போது வெள்ளி மன்றினுள் ஆடியருளும் பெருமானும் அப்படியே வரங் கொடுத்து மறைந் தருளினர்.

நாரை முத்தியடைதல்

நாரையானது நான்கு புயங்களும், மூன்று கண்களும் பொருந்திய சிவ வடிவம் பெற்று வானுலகத்தோர் பெய்த மலர் மாரியில் மூழ்கிய வண்ணம், விமானத்தில் ஏறித் தேவ துந்துபிகள் முழங்கச் சிவ லோகத்தை அடைந்து, நந்தி கணங்களுள் ஒன்றாய்த் தங்கியது.

அன்று முதல் இன்று வரையில் பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஓடித் துள்ளி விளையாடும் மீன்களேயன்றி நீர்வாழ் பிற உயிர்களும் சிறிதுமின்றி ஒழிந்தன.

இறைவன் அன்பர்க்கு எளியன்

தன் மரபினைச் சேர்ந்த பறவைகளேயன்றிப் பிற பறவைகளும் தன்னைப்போல் நற்கதி அடையும்படி இறைவனிடத்து வரம் வேண் டியது இந்த நாரை. இதன் அன்பினில் வியப்புளதோ? அன்றி அதற்கு எளிவந்த இறைவன் அருளின் கண் வியப்புளதோ? எது வியற்கற் பாலது! அன்பர்களுக்கு இன்ப வடிவாய் விளங்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவருள் அன்பர்களின் அன்புக்கு மிக எளிதே ஆகும்.

சுகுணபாண்டியன் சுவர்க்கம் அடைதல்

சுகுண பாண்டியன் தன்னாட்டில் பாவமாகிய களையைக்களைந்து தருமமாகிய பயிரை வளர்த்து, அதன் பயனை நுகரும் பொருட்டுச் சுவர்க்கலோகத்தை அடைந்திருந்தான்.

செய்யுள்—25

ஆகச் செய்யுள்—2321

கூடற் காண்டம் முற்றிற்று

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய

திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா

L. P. இசைத் தட்டுக்கள் (E. C. S. D. 35503)

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

தி கிராமபோன் கம்பெனி ஆப் இந்தியா-லிமிடெட்

வெளியிடப்பெற்றவை

பாடியவர்: டாக்டர் சேலம். ஜெயலெட்சுமி

—திருக்கோயில்கள், திருமுறை விழாக்கள், பொதுக்கூட்டங்கள், தெய்விக நிகழ்ச்சிகள் ஆகியவைகளில் கந்தன் அருள் கவிதை ஒலியைப் பரப்பி அருள் நலம்பெறுக! விபரங்களுக்கு,

மேலாளர்

ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் — 612504

ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள்

மகேசுவர பூசை வெளியீடு

1 பெரிய புராணம் (மூலம்) ... விலை ரூ. 12—00

இலங்கை உலக இந்து சமய மாநாட்டு வெளியீடு:

2 "Peeps into the Cultural Heritage of Hinduism" Rs. 25-00

By Thiru M. Arunachalam, M. A.,

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அருளாட்சியின்

பத்தாண்டு நிறைவு வெளியீடு:

3 சேக்கிழார் புராணம், திருமுறைகண்ட புராணம் விலை. ரூ. 0—75

4 திருவிளையாடற் புராணம் (உரை நடை)
கூடற்காண்டம் விலை. ரூ. 3—50

விற்பனையாளர்களுக்கு 20% கழிவு உண்டு.

மேலாளர்,

ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்—612504.

ஸ்ரீ கா[illegible]த்திற்காக வெளிய்ட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504